உ

சிவமயம்

# திருநெல்வாயில் அரத்துறைப்புராணம்

# திருவரத்துறைநாதசதகம்



திருநாவுக்கரசர் திருஞானசம்பந்தர் சுந்தரர்

தருமை ஆதீனம்

வெளியீடு எண். 1057

உ
சிவமயம்

# திருநெல்வாயில் அரத்துறைப்புராணம்
# திருவரத்துறைநாதசதகம்

இந்நூல்,
திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்
இருபத்தாறாவது குருமகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த**
**பரமாசாரிய சுவாமிகள்**

திருவுளப்பாங்கின் வண்ணம்

**திருநெல்வாயில் அரத்துறை (திருவட்டத்துறை)**
**ஸ்ரீ ஆனந்தநாயகி சமேத ஸ்ரீ அரத்துறை நாதர் என்கிற**
**ஸ்ரீ திரிபுரசுந்தரி சமேத ஸ்ரீ தீர்த்தபுரீஸ்வரர் திருக்கோயில்**
**ஜீர்ணோத்தாரண புனராவர்த்தன அஷ்டபந்தன**
**மஹா கும்பாபிஷேகப் பெருவிழா மலராக**
**ஞானசம்பந்தம் பதிப்பகத்தில் வெளியிடப்பெற்றது.**

தருமையாதீனம்
24-03-2011

சதாபிஷேகம் கொண்டருளும்

26 ஆவது குருமகாசந்நிதானம்



ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த

பரமாசாரிய சுவாமிகள்

உ

சிவமயம்

# முன்னுரை

எந்தை ஈசன் எம்பெருமான் ஏறமர் கடவுள் என்றேத்திச்
சிந்தை செய்பவர்க் கல்லால் சென்றுகை கூடுவ தன்றால்
கந்த மாமலர் உந்திக் கடும்புனல் நிவாமல்கும் கரைமேல்
அந்தண் சோலை நெல்வாயில் அரத்துறை அடிகள் தம் அருளே.

- திருஞானசம்பந்தர்.

தென்னாட்டில் விளங்கும் வரலாற்றுச் சிறப்புடைய பழமையானதும், மூர்த்தி தலம் தீர்த்தம் என்னும் மூன்றாலும் சிறப்பு வாய்ந்ததும், தேவாரப்பாடல் பெற்ற நடுநாட்டுத் தலங்கள் 22ல் முதன்மையாகப் போற்றப்படுவதும், நீவாநதி என்று அழைக்கப்படும் வடவெள்ளாற்றங்கரையில் விளங்குவதும், சப்த துறைகளில் மேன்மையாக கருதப்படுவதும், மூவரால் பாடல் பெற்றதும், அருணகிரி நாதரால் திருப்புகழ் அருளப்பெற்றதுமாகிய திருத்தலம் திருநெல்வாயில் அரத்துறை. ஆதிசேடன் இத்தலத்தில் வழிபட்டதால் திருஅரவத்துறை என்று பெயர்பெற்று தற்காலத்தில் திருவட்டத்துறை என அழைக்கப்படுகின்றது.

திருஞானசம்பந்தர் தாமரை மலர்போன்ற தம்திருவடிகள் வருந்தத் தரைமீது நடந்து இத்தலத்து இறைவரை வழிபட வந்தருளினார். அதுபோழ்து அரத்துறை அண்ணலாராகிய சிவபிரான் ஞானசம்பந்தருக்கு முத்துச்சிவிகை, முத்துக்குடை, முத்துச்சின்னம் முதலானவை அளித்து அவரை அழைத்து வருமாறு அரத்துறை வேதியர்களுக்கு உணர்த்தியருளியவாறு சிவவேதியர்கள் இறைவனளித்த முத்துச்சிவிகை முதலியவற்றுடன் மாறன்பாடி (இறையூர்) சென்று அங்கிருந்து ஞானசம்பந்தரை இத்தலத்திற்கு அழைத்துவந்தனர் எனப் பெரியபுராணம் கூறுகிறது.

சமய உலகில் புகழ்பெற்று விளங்கும் இத்தலத்திருக்கோயில் அறநிலையத்துறை சார்பிலும், அன்பர்கள் பலரின் உதவியாலும் நன்கு திருப்பணிகள் செய்யப்பெற்றும் புதிய ஐந்து நிலை

ராஜகோபுரத்தை தருமையாதீனம் 26 ஆவது குருமகா சந்நிதானம் அவர்கள் பெரும் பொருட்செலவில் அமைத்தும் மகா கும்பாபிஷேகத்தை முன்னிட்டு ஸ்ரீ சொக்கநாதப் பெருமான் பூஜாமூர்த்தியுடன் எழுந்தருளி மகா கும்பாபிஷேகத்தை சிறப்புற நிகழ்த்தியருளினார்கள்.

திருநெல்வாயில் அரத்துறை திருக்கோயிலின் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழாவை முன்னிட்டு கும்பாபிஷேக விழா மலராக "திருநெல்வாயில் அரத்துறைப்புராணம் திருவரத் துறைநாதசதகம்" என்னும் நூலையும் வெளியிட்டு அருளுகின்றார்கள்.

தமிழகத்தில் விளங்கும் ஆதீனத்தலைவர்களும், ஆட்சியாளர்களும், அறநிலையத் துறையினர் பலரும் விழாவில் கலந்துகொண்டு சிறப்பிக்கின்றார்கள்.

விழாமலரை அன்பர்கள் ஓதிஉணர்ந்து அருள்மிகு ஸ்ரீ ஆனந்தநாயகி சமேத ஸ்ரீ அரத்துறை நாதர் என்கிற ஸ்ரீ திரிபுரசுந்தரி சமேத ஸ்ரீ தீர்த்தபுரீஸ்வரர் திருவருளையும் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தின் அருளாசியையும் பெற்று இன்புறுவார்களாக.

**ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தின்**
அருளாணையின் வண்ணம்
**முனைவர் மௌன குமாரசாமித் தம்பிரான்**
கட்டளை விசாரணை
தருமையாதீனம் மௌன மடம்,
திருச்சிராப்பள்ளி.

**தருமை ஆதீனம்**
***24-03-2011***

# உள்ளுறை

முன்னுரை

ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள் வரலாறு





## தருமை ஆதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

## தருமை ஆதீனத்தை நிறுவியருளிய

# ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள் வரலாறு

சீரணியும் நுதலின்விழி மழுமான் நாகம்
    திருந்தும்எரி பொருநதுவிடம் தெரிந்தி டாமல்
தாரணி அன்பயைன அவர்போல் வந்த
    சைவசிகா மணிஎவர்க்கும் தலைவன் எங்கோன்
காரணியும் நெடிய சொழிற கமலை வேந்தன்.
    கருணைமழை பொழியும்இரு கடைக்க ணாளன்
பாரணியும் ஞானசம் பந்தன் எந்தை
    பரமன் இரு சரணமலர் பரவி வாழ்வாம்.

- ஸ்ரீ சம்பந்தசரணாலயர்

ஸ்ரீ வில்லிபுத்தூரில் கார்காத்த வேளாளர் குலத்தில் சுப்பிரமணியப் பிள்ளைக்கும் மீனாட்சியம்மைக்கும் அருந்தவ மகவாக அவதரித்தார் குருஞானசம்பந்தர். மதுரையம்பதிக்குத் தம் பெற்றோருடன் சென்று குலதெய்வமாகிய ஸ்ரீ சொக்கநாதரை வழிபட்டார்; திருவருளால், பொற்றாமரைக் குளத்தில் ஈசானமூலையில் பெட்டகக் கோயிலுடன் சொக்கநாதர் கண்ணுக்கினிய பொருளாகக் கைவரப் பெற்றார்; சொக்கேசன் அருளியபடி திருவாரூர் சென்று ஸ்ரீ ஞானப்பிரகாச தேசிகரை வணங்கிச் சிவஞான உபதேசம் பெற்றார்; சொக்கநாதர் பூசையும், எழுந்தருளச் செய்து கொடுக்கப்பெற்றார். குருவாணைப்படித் தருமபுரத்தில் அமர்ந்து பக்குவான்மாக்களுக்கு ஞானோபதேசம் செய்து சைவ சித்தாந்தத்தைப் பரவச்செய்தார். தமது ஆன்மார்த்த மூர்த்தியாகிய ஸ்ரீ சொக்கநாதர் மீது சொக்கநாத வெண்பாப்பாடித் துதித்தார். சிவபோகசாரம், முத்தி நிச்சயம், சொக்கநாதக் கலித்துறை, ஞானப்பிரகாசமாலை சோடசகலாப்பிராசாதசட்கம், திரிபதார்த்தரூபாதி தசகாரிய அகவல், நவரத்தினமாலை ஆகிய நூல்களையும் அருளி சைவசித்தாந்த நெறியைப் பரவச்செய்தார்.

இவ்வாறு பல்லாண்டுக்காலம் ஞான அரசாட்சி புரிந்து சிவலிங்கத் திருவுருவின் கீழ் சீவசமாதி கூடினார் ஸ்ரீகுருஞான சம்பந்தர். அவர் சீவசமாதி கூடிய குருமூர்த்தமே தற்பொழுது ஞானாம்பிகை உடனாகிய ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயிலாக விளங்கி வருகிறது. கி.பி. 16ம் ஆம் நூற்றுண்டில் ஸ்ரீகுருஞான சம்பந்தரால் தோற்றுவிக்கப்பெற்ற இத்தருமையாதீனத் திருமடம் மொழித்தொண்டும், சமயத் தொண்டும், சமூகத் தொண்டும் ஒல்லும் வகையெல்லாம் ஆற்றி வருகின்றது. ஸ்ரீ குருஞான சம்பந்தரது பரம்பரையில் தற்பொழுது 26 ஆவது குருமகா சந்நிதானமாக எழுந்தருளியிருப்பவர்கள் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் ஆவார்கள்.

❄❄❄❄❄❄❄



திருச்சிற்றம்பலம்

# திருநெல்வாயில் அரத்துறைப்புராணம்

✱✱✱✱✱✱✱

## காப்பு

திங்களங் குழவி நேருஞ் செவ்விய தந்தச் சோதி
தங்கிடுங் கரத்தான் முன்னாட் சந்தன வச்சி றுத்தோன்
புங்கவர்க் கபய மீந்த புனிதவெண் ணீற்று மேனித்
துங்கமா முகத்தோன் பாதத் துணையடி தலைமேற் கொள்வாம்.

******

## பாயிரம்

### விநாயக வணக்கம்

பூமேவு திசைமுகனு நெடுமாலு மகபதியும் போற்று கின்ற, ஏமேவு முதல்வனெனப் புகழ்பெறுவான் யாதுமெழு துறுமுன் யாரும், பாமேவு கருணைபொழி தருகவென வேண்டவருட் பான்மைநல்கு, மாமேவு மாமுகத்து வலஞ்சுழிப்பேர் விநாயகனை வாழ்த்தி வாழ்வாம். (க)

### சுப்பிரமணிய வணக்கம்

புயலேறும் புரந்தரன்றன் மருமகனென் றிடுங்காதல் பொங்கி நிற்பக், குயிலேறு மொழிமகளை மணமேற்றிக் களிசிறந்த குகப்பே ரெம்மான் வெயிலேறு மெயிலேறு மரத்துறையில் மெய்யடியார் மிகவே வாழ்த்த, மயிலேறும் பெருமானை யயிலே ந்துங் கோமானை வணங்கி வாழ்வாம். (உ)

### பரசிவ வணக்கம்

சீர்த்திமிகு மரத்துறையிற்றிருஞான சம்பந்தற்சிவிகையோடு, மார்த்தவிய திருச்சின்னங் கொடுத்தருளு மண்ணலடி யவர்தமக் குப், பூர்த்திமிகு மின்பளித்துப் பின்னுறப்பொன் னடிநிழலைப் புரிந்த ளிக்குந், தீர்த்தபுரி யீசர்திரு வடிமலரை முடிமலர்மேற் சேர்த்து வாழ்வாம். (ங)

## பராசத்தி வணக்கம்

வரத்துறைவேண் டியபேர்க்கு வண்டமிழுஞ் செந்திருவும் வாய்ப்ப வென்றுங், கரத்துறைநெல் லிக்கனிபோற்கடைக்கணி த்தே யெண்ணமெலாங் களிப்பி னீய, வரத்துறையின் சிரத்து றையுங் கருணைநாயகியாளா மொப்பி லாத, வரத்துறைவா ழான ந்த நாயகிதாண் மலர்முடிமே லணிந்துவாழ்வாம். (௪)

## சண்டேசுர வணக்கம்

சண்டியீ சுரத்தலைவ நினைக்கண்டா லெனைக்கண்ட தகை மையா மன்றி, யுண்டிகா மலர்யாவு முன்னையன்றி யார்க்குரிய வுரைப்பா யென்று, சண்டிகாப்புடனேபூந் தொடையன்முதற் றர ப்பெற்றே கவினுகின்ற, சண்டிகே சுவரர்திருத் தாண்மலரைச் சென்னிமிசை தரித்து வாழ்வாம். (௫)

## சமயாசாரிய வணக்கம்

காசினியி லுள்ளபல சிவதலங்கடமைக்கருதிக் கண்டு பாடிப், பூசனைசெய் தவரவரைப் புகழ்ந்தேத்திப் பூதலத்திற் புகழே தந்த, வீசரெனுஞ் சம்பந்தர் திருநாவுக் கரசர்பிரா னெழி லாரூரர், யோசனைகொள் மாணிக்க வாசகரோ டிவர்தாளை யுளத்தில் வைப்போம். (௬)

### பாயிர முற்றிற்று.



சிவமயம்

# புராண வரலாறு

சொல்லு நற்கவி சுகுணமாச் சோர்வின்றித் தூய்தா
மெல்லை யிற்புக ழெய்திடப் பாவல ரேத்த
வல்ல பைக்கருள் மாமுகத் தவனடி வாழ்த்தித்
தொல்லை நாளுள வடமொழி தமிழினிற் சொல்கேன். (௧)

திரும டந்தைதன் காதலன் றிகழ்மல ருந்தி
மருவு நான்முகன் வாயுறை வாணியை வாழ்த்தித்
தருவு நேரிலா வீகையா னரத்துறை தனில்மே
விருவி சும்பிடை யவனியிற் புராணம திசைப்பேன் (௨)

செப்பு நற்றல மிருப்பிடந் தேர்ந்துற வெண்ணி
லொப்ப றுந்திரு முதுகுன்ற நிருதியென் றுரைப்ப
மெய்ப்பு றுந்திரு முட்டமாம் பதிக்கது மேற்குத்
துப்பு றுந்திரு வதிட்டர்தந் துறைக்கெதிர் கிழக்கு (௩)

வேறு.

எல்லையாம் வில்வநதியெனு நல்லூ ரிதற்குத்தென் மேற்கென விசைப்பர், சொல்லிவா ழும்மை யழைத்திட வந்த சுவேத திற் குத்தரந் துலங்கு, நல்லவான் மீகர் சேடனுஞ் சனிய ருடொறு மிழைத்திடு பெருமை, நெல்லுவாய்ந் துற்ற வரத்துறை மகிமை யாவரே நிகழ்த்திடற் பாற்றே. (௪)

வேறு

முன்னஞ் சொன்னது பிரமகை வர்த்தமென் றுரை தரு முதுநூலி, னன்னர் தேவருக் குரைத்ததோ ரிச்சிவதோத் திர நயந்தன்னிற், பன்னு நூலினிற் பகர்ந்திடு சரிதத்தைப் பலரறி தரும்வண்ண, மன்ன நற்கதை யாமென நந்திவான் மீக ருக் கறைந்தாரால். (௫)

வேறு

வேண்டி னார்க்கதை வடமொழி வகையினுல் விரித்தார்
மீண்டு மிக்கதைத் தமிழினுற் குலோத்துங்க வேந்தன்
றூண்டு கோலினுற் பாடினன்வைணவச் சுகுணன்
காண்டு நாடெனு மரங்கவா சாரியாங் கவிஞன் (௬)

தழையும் வெண்ணிலாத் தரளவெண் குடைநிழற் றரணி
வழியி னுலல காண்டவன் குலோத்துங்க வள்ளல்
விழைவு கொண்டபின் னித்தல மகிமையை விரித்தான்
பழியி லாததோ ரரத்துறைப் பதியின்சீர் பரவ. (எ)

முன்ன னுகியு முதல்வ னுகியு முனிவோர்
பன்னு நாவினுக் கானவ னுகியும் பருந்தீ
வன்னன் மேவிடு கயிலைவாழ் நந்தியெம் வரதன்
சொன்ன வாறுதென் மொழியினுற் சொல்கெனச் சொற்றேன் (அ)

வேறு

## அவையடக்கம்

மழைபொழி யமுத மியாவர் மந்திர மருவுற் றாலும்
விழைவொடு சேர்ப்ப தல்லால் விலக்குவ துண்டோ வேலை
கழைசுவைக் கைக்கக் கற்றோர் கண்டுரை நூலி னுக்கிங்
கிழிவுள தெனினு மிந்நூ லியல்வல்லோ ரேற்ப ரன்றே. (கூ)

விண்டுயர் கருட னேக விழித்ததைக் காண்ட சேவல்
திண்டிற மாகச் சேருஞ் செயலிலாச் செயலைப் போலப்
பண்டையோர் பகர்ந்து நூலைப் பகுத்தறி யாத யானு
மிண்டுசீர் புராணஞ் சொல்ல விழைந்தன னறிவிலேனே. (க0)

ஆர்மரை சேறுற் றால் மழகினுர் பூவுற் றாலும்
பார்பய நீருற் றாலும் பரிந்ததைக் கொள்வார் போலத்
தேரிலா தடியேன் சொல்லுந் தெளிவிலா தெனினு மிந்நூல்
சீர்மிகச் சிறந்தோர் யாருஞ் சிறப்பெனக் கொள்வ ரன்றே. (கக)

வேறு

சொல்லு மிக்கதை சுகுணம தலவெனத் துணைக்கா
தொல்லை நீக்கினுஞ் சொற்குறை மேவினு மிச்சொ
லல்ல னீக்குறு மரத்துறை சரிதமென் றாய்ந்தே
யெல்லை யோர்களு மிக்கதை யேற்பரே யினிதின். (கஉ)

வேறு

சுத்தவெண் ணிலவைப் பெற்ற சுகுணப்பா லாழி தன்னை
மத்தினு லுழக்கி வானேர்க் கமுதருட் டிருமான் மான

## தலவிசேடம்

வித்தல மிசைத்து நந்தி யெவ்வகை வருணத் தோருஞ்
சத்தியம் வீட ளித்தார் சகலமு முய்ய வென்றே. (கரு)

## நூற்பயன்

வேறு

கண்ணுதலி னருளமைந்தோன் காசினியி லரத்துறையூர் கலந்து வாழ்வோ, னென்னுபாரத்வாச கோத்திரத்தான்காண் டு ரா னிரங்கா சாரி, பண்ணுதமிழ்ப் புராணமிதைப் பரிவுடனே பகர்ந்துரைத்தோர் படித்தோர் கேட்டோர், வண்ணமுடனெழு திவைத்தோர் வாங்கினோர் நீடுழி வாழ்க மாதோ. (கச)

புராணவரலாறு முற்றிற்று.
ஆகச்செய்யுள் உக.

## தலவிசேடம்

ஐந்நி லத்தினு மதிகமா மழகிய மருத
மைந்நி லத்தலத் ததிகமா மரத்துறைத் தலந்தா
னைந்நி லத்தெய்வத் ததிகமா மரத்துறை நாத
னைந்நி லத்தலை யனந்தன்செய் தவநிலை யங்கண். (க)

வேறு

இத்தலப் பெருமை யெடுத்துமே யுரைத்தா ரெழிலுள நாவலூர் நம்பி, சித்தமாய்ச் செய்தார் சிறப்புட னடந்தாருடுத் தவர் சிவனை விடுத்தோர், சத்திய நிரைத்தார் சகலரும் பதவி சாயுச்சியஞ் சாஸன மென்றார், மெத்தமே லுளதோ வேறுள தலங்கள் மேவவுங் காணவு மிலையே. (உ)

சாதியிற் பிரமன் மணியினில் வயிரஞ் சாத்துறு புஷ்பமேற் சாதி, நீதியி லரச னீரினிற் கங்கை நீள்பு வி கைலையு மொப்பாங், காதுகொள் புனித சங்கரன் கதையாங் கடற்புவி யதனிலே யுள்ள, மேதகு தலங்க ளனைத்தினு மதிகம் விளம்புவார் திருவரத் துறையே. (ரு)

பிறப்பினுல் மரண மாவதாற் சிந்தை பெறுதலாற் பார்ப்பதி னுலும், பிறப்பிலா ஞானப் பதவியை யடைவா ரெய்திடார் பிறவியிப் பாரற், சிறப்பினு லுடைய புலவர்கள் சொல்லுஞ் சேர் தல மைந்துமொன்றாகி, யெறப்புறு கற்பின் மங்கையர் போல வெழினிறை வெய்துமித் தலமே. (ச)

பூத மைந்தினுக் கைம்பதி புகன்றது மறித்தாய்
பேத மன்றிவந் தவைந்துமிப் பெரும்பதி யடையும்
ஏது வென்னென வத்தலக் கடையின்முன் னெழுத்தை
யோதி யுற்றிடின் றிருவரத் துறையென வுணர்வாய் (ரு)

காளவத்திரி யருணையுந் திருவானைக் காவற்
றாள்பெ யர்த்திடுஞ் சிதம்பர தலமது தரணி
மீள வீகலான் மேவிய மருத்துவத் துறையே
கோளி னீற்றினூர் மூன்றெழுத்தீற்றினிற் கொளுவாய். (சு)

(இ.ள்) காளவத்திரி-என்பதில்-தி-அருணை-என்பதில்-ரு-திருவானைக்காவல்--என்பதில்-வ-சிதம்பரம்-என்பதில்-ர-திருவாரூருக்குச் சிறந்த பெயராகிய-மருத்துவத்துறை-என்பதில்-த்-துறை-ஆகத் திருவரத்துறை எனவருதல் காண்க. (எ-ம்)

நாற்றலத்தினில் நாலெழுத்தேயெடுத்
தீற்று நற்றல வீற்றினில் மூன்றெழுத்
தாற்ற வேயெடுத் தாளுத லேனெனின்
சாற்று மேழ்துறை தம்மின்முன்னுனதால். (எ)

வேறு

பிறக்கி னுந்தல மிறக்கி னும்விழி சிறக்கி னும்பெயர் நினைக்கினும், பிறக்க வும்புவி யில்லை காண்பரம னடியில் வாழ்வுபெறு புனிதரென், றறப்பெ ரும்பலவு நூலுரைக்குமுயிர் போகு முன் னொருவனஞ்செவி, திறத்த ரத்துறையெ னப்பு கன்றிடில் சென்ன மில்லையிது காணுமே. (அ)

வேறு

காது ரைத்திடுங் கன்னநன் மந்திரக்க தியால்
தீத கற்றியே சீவனுஞ் சேர்ந்திடு மோக்கம்
யாது மந்திரத் ததிகமா மரத்துறை யரன்பேர்
காது ரைத்திடின் கயிலையை யடைவதற் புதமோ: (கூ)

வந்து நோற்றுவான் மீகியு மாலயம் வதிந்தான்
சிந்தை நன்குடைச் சேடனும் செய்தனன் தவஞ்சம்
பந்த நாதன்பொற் சின்னமுஞ் சிவிகையும் படைத்தான்
எந்த மூவருஞ் சொல்லிய பாடலு மினிதே. (க)

வேறு

இதற்குரிய பெயர்சப்த சங்கையென்பா ரிவைதாமு மென்னை யென்னின், மதித்திடுமூ-ரைந்தொடுக்கங் காணுழி காசி தலம்

## தீர்த்தவிசேடம்

வடவால் க்ஷேத்ரம், துதித்திடுநற்றீர்த்தபுரந் திருநெல்வாய ரத்துறைதான் றூயோர் சொன்ன, விதித்துரைத்த வான் மீகர் வியந்தவிந்நா மங்களையே விரித்துச் சொல்வாம். (கக)

பேறொணிவா நதிபுரமே பேசுமரவத்துறையே பெரியோர் சொன்ன, சீருளபே ரிவையென்ப திகழ்ந்திடுபே ரிவைதம்மைச் செப்பு மன்பாற், காருலவும் புவனமெல்லாங் கண்டறிய நானு ரைத்தேன் கருதும் வேத, நீருலாந் தீர்த்தபுர, நிருமலன்சீர் யா ரெடுத்தே நிகழ்த்துவாரே. (கஉ)

வேறு

பால காசியி னுயிரத் ததிகம்பார் விருத்தை
சால மற்றதி னுயிர மதிகமித் தலந்தான்
கால வூழியின் காசியா மரத்துறை காண்பா
யாலு டன்வலஞ் சுழிக்கண பதியிங்கு மறிவாய் (கங)

தலவிசேடமுற்றிற்று
ஆகச்செய்யுள் ஙச.

## தீர்த்தவிசேடம்

ஆறு பத்தி னுறுகோடி யவனிமீதில் தீர்த்தமாம்
மாறி லொன்று சேர்வதான கங்கையாதி நதிகளாம்
வீறுமாலின் மெய்யின் வேர்வை மேவு தீர்த்த நித்யமாம்
கூறு மாலின் றேககசுத்தி கொடுத்ததிந்த தீர்த்தமே. (க)

வேறு.

ஆய்ந்ததோ ரேனக் கடவுளிந் நதியிலனேகநா ளருந்தலம் புரிந்தே, தோய்ந்தினி திருந்த தன்மையா லவர்மெய் தூய்மையை யுற்றதா மென்பர், தீர்ந்திடப் பாவத் தொடர்ச்சியைச் செய்யுந் திருவுளத் திச்சையே யளிக்கும், வாய்ந்தவிந் நதிநேர்வை யகத் திலேகாண் வானதிக் கண்ணுமவ் வாறே. (உ)

வேறு.

அன்னமல ரெனும்பொய்கை யமைந்துளதங் கதின்பெருமை யறியொ ணுதால், சொன்னதுகேள் நீலமலர்ப் பொய்கை யென வுளதொன்று சொல்லத் தோன்றா, பின்னுளநன் னிவாந்தியா மிதன்பெருமை யாரேனும் பேசற் பாற்றோ, நன்னதியோ சுவேதமுறும் பன்னதியுங் கறுப்படைதல் நலமேயன்றோ. (ங)

## திருவரத்துறைப்புராணம்

ஒவ்வொரு தலத்தி லொவ்வொரு வருக்கே யொவ்வொரு வரமுறிவியல்பா, மிவ்வரத் துறையி லினியமா றனக்கு மெழிலுள வாதிசே டனுக்கு, மெவ்வகை யருளு மிசைகலை மகட்கு மேத்துவான் மீகநன் முனிக்கும், கவ்வையை யொழித்துக் கரு த்தெலா மளிக்குங் காதையைக் கழறுவ தரிதே. (ச)

ஆதலா லிங்குப் பிறந்துளோ ரிறந்தோ ரழகுடன் வாசமே செய்தோர், தீதெலா மொழியத் தானமே செய்தோர் தீர்க்க மாய் மனதிலே நினைத்தோர், சாதியா லிழிவை யுற்றவ ரெனினுஞ் சார்வகைப் பிறவியேழ் தனிலு, மாதியாம் பரம னருளினுன் மோக்க மடைவது திண்ணமென் றறிநீ. (ரு)

எத்தலத் தேனு மிசைமறை யோருக் கெழிற்பசு பரிகய மீந்தோர், மெத்தநல் லாடை மேவிடப் பூண்கள் மேன்மையாயீந்திடு பலன்கள், சுத்ததண் டுலமுஞ் சுவர்ணபாத் திரமுஞ் சொற்பமா யாயினு மீண்டு, பத்தியாப் பிதிருக் களித்திடி னவை கட் காயிரத் திரட்டியாம் பலனே. (சு)

அன்னசத் திரங்க ளாலய மமைத்தோ ரமைவுறச் சிகரியும் புரிந்தோர், பின்னமில் லாம லேரியுங் கண்வாய் பிறழ்விலாக் கூபஞ்சா வடியு, நன்னய வேத பாடசா லையுமே நாறுநீர்ப் பந்தனற் பலன்கள், பன்னவே புரிந்தோ ருலகினி லடையும் பயன்களைப் பகருவ தெவரே. (எ)

தீர்த்தவிசேட முற்றிற்று
ஆகச்செய்யுள் சக.

## மூர்த்திவிசேடம்

முடியார்மா றெழுங்கடவுள் முன்குடிஞைச் சென்னிவைத் தோன் முதல்வ ஞனேன், றொடியரவங் கையுடையான் றொண்டனுக்குப் பணிவுடையான் றூயோர் யார்க்குஞ், செடிதுடைத் துச் சேரளிப்பான் பல்லுயிரைப் புரந்தளிக்குஞ் சிவனே யாஞன், றொடியணியு முமைகேள்வ னரத்துறையெம் பெருமான்சீர் சொல்வார் யாரே. (க)

## நாட்டுப்படலம்

காலனைமுன் னுதைத்தொழித்தான்காமனையுஞ் சுட்டழித்தான் கருதுந் தக்கன், சிலநெடு மகமொழித்தான் றகர்முகத்தை யுங்கொடுத்தான் சிறந்தவாழியச், சாலவரு மாலமுண்டான் சல சமுதற் பல்லுயிர்க்குந் தந்தை யானுன், பாலரெனும் பன்றித மைக் காத்தளித்தான் சிவனை பல்லாற் பரமன் யாரே. (௨)

வேறு.

அளவிலா தவனு யாதியா யநாதி யாகியே யகிலமுமவனுய், விளைவதற் குரிய வினைப்பய னெல்லாங் கெடுத்தலும் விடுத்தலுமவனுய், களைகளை பயிர்போ லுயிர்களைக் காக்குங் கருணையங் கடலென நிறைந்த, வுளபுவனங்க ளனைத்தையுங் கடந்த வொருவனை யுரைக்குமா றெவனே. (ங)

வேறு.

*யாக மன்னனு மருணைத்தன் னுதனுஞ் சம்புப்
பாக முற்றதோ ரீசனும் வாயுவின் பதியு
மேக முற்றவா காயத் தினிறையு மொன்றாகி
யோக முற்றிடி னரத்துறைப் பெருமையா ருரைப்பார். (ச)

வேறு

ஐந்தமைந்து மைந்து நான்கு மதிகமான வீசனி
யைந்துநீக்கு மைம்முகத்தா னைந்துமூர்த்தி யாகையா
னைந்துசென்னி யானழைக்க வைந்துகாட்டி யொன்றதா
யைந்தமர்ந்த மூர்த்தியா னரத்துறையி னுதனே. (ரு)

மூர்த்திவிசேட முற்றிற்று.

அக செய்யுள் சசு.

## நாட்டுப்படலம்.

செய்தவ மனமுஞ் சிவன்றனைப் பேணுஞ் சிந்தையுஞ் செல் வமுஞ் சிறப்பா, மெய்யுள வுரையு மிடியுளார் தமக்கு மேம்பட வளித்தலு மல்லால், நெய்தலுங் கமல மலருமே நிறைந்து ஞெமுங்கிடு வயலெலா மள்ளர், கொய்திடுஞ் சாலி யோங்குறுஞ் சோழ நாட்டின்சீர் கூறவும் படுமோ. (க)

---

* தியாகம் என்பது தலைக்குறையாய் நிற்கின்றது.

வேறு.

கலைமக ளுருவெனக் கலந்த விண்ணிடை
நிலைமைகொண் மாமுகில் படர்ந்து நீள்சுட
லலைகளை மேய்ந்துய ரரியி னுகமாய்
மலையினிற் சூல்கொடு மருவி யுற்றதே. (உ)

வேறு.

அரத்துறைப் பதியான் மழுவென மின்னி யன்னுன்
திரத்தி னுடுறும் போதணி சிலம்பெனச் சிலம்பிப்
பெருத்த வன்றரு கொடையெனப் பேருல கிடையே
வருத்த நீங்கிடப் பெய்திடும் வளம்பெற மழையே. (ங)

வேறு.

ஆறுநன் னதிகு ளங்க ளழகிய வோடை யெங்கும்
பேறுபள் ளங்கண் மூடப் பெருவெள்ளங் கொள்ளா தாகிச்
சேறுள கழனி சேர்ந்து செழும்புன லாற்றி னூடே
காறிதழ்க் கடலைக் காணக் கங்கைபோ லேகு மன்றே. (ச)

கானக மயில்க ளாடுங் காவியில் கமலம் பூக்குந்
தேனுள வல்லி பூக்குந் தெரிந்ததி னன்ப ரன்றி
மேனறு நறவ மாந்தி மிகுசுரம் ஞிமிறு பாடுங்
கானக மலர்க ளாலே கமழ்தலைக் கவிக்கு மன்றே. (ரு)

தருகனி முதிர்ந்து பாயுந் தக்கநற் றேனும் பூவின்
பெருமணங் கமழுந் தேனும் பேருள கொம்பின் றேனுஞ்
சுரமதிற் படர்ந்தே யாறுய்ச் சொன்மடை களையு டைத்து
நிரவியே பாயு நன்செய் நீள்பைங்கூழ் தனைவ வளர்க்கும். (சு)

பேடையோ டோதி மங்கள் பேர்ந்திடாக் கழனி தன்னில்
மேடெலாஞ் சங்கி னங்கள் மிளிரொளி தரள மீனும்
வாடிலா வாளை தாவி வளர்தருந் தேங்கிற் பாய்ந்திங்
கீடிலா தடித்த லாலே யீண்டிள நீரு தீர்க்கும். (எ)

தேங்கொடு கமுகு வாழை தேற்றமா பலவே கொய்யா
வோங்கிடுங் கழைந ரத்த முயர்ந்திடு பொழில்க ளெல்லாம்
பாங்குள விண்ணு டெய்திப் பண்ணவர் யாரு முண்ண
வாங்கவை கொடுப்பக் கண்ட வைந்தரு நாணு மன்றே. (அ)

செப்பிய செய்யிற் பையப் பயிர்நடுஞ் சேடி மாரின்
தப்பிலாக் கமலக் கண்கள் சலத்தினிற் றுேன்றலாலே
யொப்பிலாக் கஞ்ச மென்றே யுளர்தரும் வண்டி னங்கள்
அப்புள கழனி தோறு மலைந்தலைந் தயரு மம்மா. (கூ)

ஏறுகட் டேரு முற்கே யெழிலுள நீர்க்கால் பாய்ச்சிச்
சேறுசெய் குநருந் தெய்வந் தொழுதுநற் செந்நெல் வீசி
நாறுசெய் குநரு நாற்றை நடவுசெய் குநரும் பின்பு
மாறுசெய் களைகட் டோம்பி வளம்படுப் பார்க ளானூர். (க0)

களைகடிந் தொதுங்குகின்ற கடைசியர் முகத்தைக் கண்டு
வளைதரு மரைக ளெல்லா மதியென நாணி வாடு
நளிர்தருங் குவளை யெல்லா நல்விழி கண்டு நாணும்
வளையெலாங் களத்தைக் கண்டு வளையினிற் புகுந்து மல்கும். (கக)

பழியுள கள்ளை மாந்திப் பணிசெயுங் கடைசி மாதர்
மொழிதடு மாறி வேர்வை முகத்தொடு முறுவ றேன்ற
விழிசிவப் பேறக் கூந்தல் மென்றுகில் வீள்ளஞ் சோர
வொழிதவத் தோர்கள் போல வுடலையு மறந்துளாரே. (கஉ)

அரும்பவி மூநங்கன் வாளி யாற்றில ராகித் தந்தந்
திரம்புகழ் கொழுந ரோடுஞ் செவ்விதிற் புணர்ச்சி யுற்று
விரும்பினூர் கருப்பம் போல வெளியுளா ராருங் காண
நிரம்பின மணிச்சூல் முற்றி நிலத்துறை சாலி யெல்லாம். (கங)

ஒத்தநற் சாலி தானுமுயர்கதிர்க் காடு சாய
பித்தனல் போலே தாமும் பெரும்படி யளக்க வுன்னி
வித்தெலா முதிரக் கண்டோர் விரவிமுன் னதனைப் பற்றிச்
சத்துவம் விடாத றுத்துச் சாலநற் போர்வைப் பாரால். (கச)

கற்றைவை களைந்தெடுத்துக் காற்றினூற் றூற்றி நெல்லைக்
கொற்றவர்க் காறி லொன்று கொடுத்துப்பின் கொள்ள வந்தோர்
மற்றைய பேரக் கீந்தும் வரன்முறை யுாகப் பின்னர்
வெற்றியாய்ச் சகடத் தேற்றி வீடுய்த்து விருந்தோ டுண்பார். (கரு)

கார்பய றெள்ளு சாமை கடலைகோ தும்பை மல்லி
சீருறு துவரை யோடு சிறந்ததோர் மொச்சை பச்சை
நேருநற் பலனோ டின்ன புன்செயி னேர்ந்த வெல்லாஞ்
சேருபல் பண்டி யேற்றிச் செழுநிலங் கிழியச் சேர்ப்பார். (கசு)

துறவினர் தாசர் நேசர் தொண்டினோர் புசிக்க நல்லூண்
டிறவினி தளித்தே யேற்குந் தீனர்க டமக்கு மீந்து
முறைவிடம் பிறிது நல்கி யுயர்தவஞ் செய்தே யோயாப்
பிறவியை யொடுங்க நீக்கிப் பெருங்கதி யுய்ப்பார் யாரும். (கஎ)

நிச்சலு மீச னன்பர் நெறியுளார் வரவைக் கண்டால்
குச்சமில் குருபூ பாலர் குடித்தெய்வங் காணல் போல
வச்சமுங் கொண்டு கூசி யடிபணிந் தினிதா யேத்தி
யிச்சையா பொழுகி யுள்ள குறிப்பறிந் தேவல் செய்வார். (கஅ)

நிறைதரு கனிதேன் பாலும் விழைவொடு நெய்யின் வெள்ள
முறையுள வெள்ளி பொன்போ லுற்றிடு மடிசி றன்னைக்
குறையிலா தளித்துப் பின்பு கோருத லெல்லாந் தந்து
மறையுளார் தவத்தோர் யோகி மலரடி பணிவர் கண்டாய். (கக)

பின்னுமந் நாட்டிற் சாலை பேருள மடமுஞ் சத்ரம்
வன்னமாங் கோவிற் கூவல் வளரறச் சாலை மற்றுஞ்
சொன்னநீர்ப் பந்த லன்றிச் சோர்விலாப் பயிற்சி வித்தை
நன்னய மாகச் செய்வார் நாடொறு நாட்டா ரெல்லாம். (உ0)

நாட்டுப்படலம் முற்றிற்று
அக செய்யுள் சுசு.

## நகரப்படலம்

நிலம்புகழு மரத்துறையி னிவாநதியின் வடபாலி னிலவு கொன்றைச், சலம்பரவுஞ் சடைமுடியான் றீர்த்தபுரீ சருக்கரு காய்த் தனித்து வாழு, நலம்புரியுந் திரிபுரசுந் தரியாகு நாயகி யின் றருளு நால்வாய், வலம்புரிப்பேர் விநாயகன்றன் மலர்ப்பதத்தைத் துதி செய்து வணங்கு வோமே. (க)

வேறு.

சீரியர் கூறுஞ் சிறந்ததீஞ் சொல்லின் றெளிவெலாந் திரண்டசே விடையா, ஞரிய கவியா னகரமு குரைத்தாங் கருந்தவராதி சய மடைந்தார், தேரிலா தடியேன் றெரிந்தமட் டுரைத்தேன் றிருவரத் துறைநக ரெழிலாக், கூரிய தனைத்துங் குடியுளார் வகையுங் கூறுவேன் குவலயத் தவர்க்கே. (உ)

பூமகள் முகமோ திலதமோ நிறைந்து புகழுறுங் கமலமாம் விழியோ, மாமுலை யணியு மாரமோ மணிகொண் மாலையோ வள்ளையின் குழையோ, வாமுறச் சென்னி யணிகொலோ வுயிரினுகர மோவென வெம்மால், சேமமிக் குயர்ந்த நகரினுக் குவமை செப்புறப் பாலதோ வம்மா. (ங)

## நகரப்படலம்

மஞ்சுறு மாட மாளிகை நகரின் முடியதோ வானவர் நகரோ விஞ்சையர் நகரோ வதற்குமேற் படியோ விண்ணவர்க் கேறவேணியதோ, கஞ்சமா மலரா னந்தக ரனைத்துங் கைபுனைந் தியற்றிக்கண் டதுவோ, வெஞ்சொலான் முடியப் பாலதோ நாவி ராயிர விசைப்பவஞ் சுவனேல். (ச)

வேறு.

பாந்தள் யாகத்திற் பரிஸ்ரமம் பகுத்திடு வாஸ்தோ
தேர்ந்த சிப்பிய ரைவராற் றெரிந்துரை வாஸ்தோ
வார்ந்த பானுவின் வாஸ்துவோ வளர்மதி வாஸ்தோ
வேந்து குண்டல வாஸ்துவோ விந்நகர் வாஸ்தே. (ரு)

கோண லானதுங் குறைவிலாக் கரும்பன்றி யிலையாம்
பாண மானதிற் கொலையிலை பாவைக ணல்லால்
மாணு ருமது வுண்பவர் வண்டலா லுளதோ
காணத் தாழ்வுக தலியலாற் கழறவும் படுமோ. (சு)

வேறு.

பூமகள் வீதி யுகந்தவள் பேராள் புரந்தரன் றருவென வீவார், நாமகள் குடிக ளுவுவிட் டொழியா னன்மக விலாவக மறியார், மாமக ளெங்கு மாடிவிட் டிழியாள் மனுமுறை பிறழ்ந்திடார் மாந்தர், மீமக ளனையா மின்னனு ருருவம் வேறுபா டிலாதுமே வினவால். (எ)

வேறு.

வாழைகமு கொடுதேங்கு வளருமரு கிற்பலரை வாவெனக் கொடிய ழைக்கும், தாழைமல ரணிகணிகை தாளமொடு நிர்த்தனந் தாம்புரிவர் பரத மென்றே, ஏழுசுர மூங்கொண்டு குயில்கிள்ளை நாணியிட வெவ்விடையர் பாடு மதனை, வேழமுக னும்வ ந்து வேடிக்கை பார்க்கவே வீதியுடை மேவி னனரோ. (அ)

வேறு.

உதிக்குமன் றுனஞ் செய்வா ருயர்சந்தி யோமத் தோடு
விதிப்படி கருமஞ் செய்வார் விட்டிடார் விரத நோன்பு
கதிக்குள பிதிர்மகங்கள் காண்டெய்வ மதிதி பூசை
நிதப்படி செய்வார் சொன்னே னிக்கிடா ரீகை தன்னை. (கூ)

இலக்கணங் கணித நூற்க ளெழுத்துள விலக்க ணந்தான்
துலக்குறுஞ் சோதி டந்தான் றொல்பல நூல்கள் விஞ்சை

விலக்குறு தருக்கம் சாஸ்திரம் விதிப்படி மதனு லெல்லாந்
துலக்குறப் பார்ப்பார் கற்பார் தோற்றமா றறிவின் மிக்கார்

வேறு.

மந்திரி பவுரோன் சேனை மகிபதி மனுநூ லுள்ளான்
தந்திரி வணிகஞ் செய்வான் றரல்கொளல் தனத்தின் மிக்கான்
சுந்தர வுழவோ ரெல்லாம் தூய்பயிர் சுகமாய்ச் செய்வார்
விந்தைசேர் குடிகள் செய்கை விளம்பிடப் பால தன்றே. (கக)

வேறு.

மற்றுள வருணர் யாரு மரபுள மனுநூல் கொள்வார்
கற்றறி வுடையார் திங்க டருமழை கதிக்க வுள்ளா
ருற்றதின் பெருமை சொல்ல வுயர்குண மெவர்க்கு முண்டோ
வுற்றறியுங்கால்வாய்மைபொறையெண்ண முண்மையுள்ளார். (கஉ)

நகரப்படலமுற்றிற்று
அக செய்யுள் எஅ.

## நிவாநதிப்படலம்

நாடுநன் னகர நன்புக ழுரைத்தாய் நதியினற் புகழையு நவில்வாய், நீடவா ணந்தீ நீயரு ளென்ன நிறைந்தவான் மீகனை நோக்கி,வீடுதான் வேண்டிவெகுதவ மிழைப்போர் விரும்பியிந் நதியிலோர் தரந்தான், ஆடுவா ருகி ஞன்குளா ரெவரு மவலமாம் பிறவிநோய் நாடார். (க)

தீதிலா மொழியான் றிருவருள் புரிவான் றேவனு யவனிவாழ்ந் திருப்ப, னேததற் குவமை யெய்திய வாறு மிந்நதிப் பெருமையு மெழிலும், கோதிலா தெனக்குக் கூறுநீ யென்ருன் குறை விலா விடைகனிந் துரைத்தான், றீதெலாம் விட்டுத் திரிகுண மொன்ருய்த் தெளிந்தவ ருரைத்தன ரீதே. (உ)

காண்டிமுன் சதுர்யு கத்தினிற் கற்றோ னருந்தவன் மதங்க னுங் கனவான், வேண்டுநன் புதல்வி யிருவரு மலர்மேல் விளங்கி ழைக் கொத்தவ ரவரும், பூண்டநற் பதத்தைப் புகழுடன் றுதித்துப் போற்றினர் வராகனைப் புவிமேல், வேண்டினன் கணவனீயெனக் கென்ருர் விண்டுவும் விழைவுற விதித்தான். (ங)

## நிவாநதிப்படலம்

அன்டொரு யோனி யதிலுறை யாம லழகிய நதியதாய வருவாய், நனறுநன் னதயா யிருவரும் வருவோ நன்மண மடை தலைச் செய்வாய், விண்டுநன் னதியின் வெகுபலன் றருவாய் வேட்டமுற் றவரவர் தமக்குத், தண்டுழாய் மார்பா தாவெனக் கேட்டார் தந்தனன் றரணியை யளந்தோன். (ச)

அந்தமாந் தேகமக்கினி விடுத்தா னக்கணஞ் சேரநா டடைந்தார், முந்தவே யிருக்குங் கவுதமன்சிகர முதுளவயோத்தியின் னகரஞ், சிந்தையா மதிலே சேர்ந்துள தவத்தோ ரெவரினுஞ் சீரழகமைந்தான், கந்துகஸ் தனத்தாள் கௌதமன் கையில் கமண்டல சலத்தினி லெழுந்தாள். (ரு)

மந்திரத் தவன்கைக் கமண்டலஞ் சேர்ந்த மங்கையையும் வராகனே யெண்ணி, யந்தரத் தோரு மதிசய மடைய வழகிய நதிவடிவமைந்தாள், சிந்தையின் படியே வளர்ந்தயல் பரவி செழுமலையிடமெலா நிறைந்து, வுந்திவந் தன்னே யுலகினோர்க் கமைய வோர்நொடிப் பொழுதில்வந் துற்ருள். (சு)

வேறு.

அலைதொடி கரமணி யழகிய மணிநகை யமலையொ டழகுடையாள், விலையிலை துகிலுரை கடிகொடி நுணுகிடை விழியிருபுடைகவர்வாள், வலையெனவழி தடவிரை வளேகுழ லினள்வரி விழிகயல் வருநகையாள், கலைகரி தனமுளள கடது வடவிலை கடலினுளுறைபவளே. (எ)

விரைபடு மகில்முதல் சந்தனம் விரிமுர முதலிய மிக்கிடவே யரைபட வரையொடு முதுசினே யரைபட வொடிபட கடி தகழாக், குறைபட விரைவினில் துயில்சிறு குடியரை குறைவிடா தடியோடே, கரைபட வெறிவதும் வருவதுங் கழறிடில் கடுவிசை யொடுவருமே. (அ)

வேறு.

ஆடுமாந்தரி னணியிளே யலைத்துக்கொ டவர்த
நாடுசேலையை யீர்த்துமே நதியத வேகத்
தேடு வந்திடுஞ் சிறப்பினே யுலகுளோ ரெவரு
மீடி கற்கிலை யென்றிசைத் தேத்தலற் புதமே. (கூ)

வேறு

ஆன வேந்த ரமர்ந்த மனுநெறி
தானி றைந்த தரும்புகழென்னவே

ஞான முன்னிய நான்மறை யாளர்கைத்
தான மென்னத் தழைந்தது நீத்தமே. (௧0)

கொலையு லாவுங் கரிகள் கொடுவிலங்
கலையு மான்முத லனைத்தையு மீர்த்துமே
மலையின் மேலுள மற்றவு மண்டலால்
விலையின் மாதரை யொக்குமவ் வெள்ளமே. (௧௧)

வேறு.

நன்செயைப் புன்செ யாக்கி நற்றிட ரான மேட்டைத்
தன்செய லகழி யாக்கித் தனித்ததைத்தோட்டமாக்கி
விஞ்சையால் வித்தை கற்றோர் வேடிக்கை விதமாக் காட்டி
யஞ்சன வண்ண னென்ன வவனியோர்க் கமைந்த தன்றே. (௧௨)

இப்படி யறைந்த தீர்த்த மினிதுடன் பெருகக்கண்ட
தப்பிலா முனிவ ரெல்லாந் தாஞ்சிரஸ் நானஞ்செய்தா
ரொப்பிலாத் தேவர் சூழ்ந்தா ருமையர னங்கு வந்தான்
மைப்படி நதியி னுளு மனத்தினுற் றியானஞ் செய்தான். (௧௩)

கர்த்தன்று னவட்குச் சொல்வான் கனக்குழ லரிவைமாதே
நித்தய பதமும் பெற்றாய் நீடுயர் வராகன்றன்னை
யுற்றனை புருஷனாக வுனக்கொரு குறைவுண் டாமோ
முத்தியா முனது தோய மூழ்கினோர்க் கென்பால்வீடே. (௧௪)

அன்னையே யழகாச் சென்றே யலைகடல் புக்குநீயுந்
துன்னுதி வராகன் றன்பாற் றோகைமா மயிலேயென்று
சொன்னதோர் வரத்தாற் கங்கை சூழ்ந்தவர் சுகுண மாக
மன்னிய புனரோய் வார்தா மாற்றுவார் பிறவியூசல். (௧௫)

வேறு.

இன்னதி யோர நின்றே யெவர்தவ முஞற்றி னலு
முன்னிய பலன்க ளெல்லா முற்றுகை சரத மென்றார்
நண்ணின ரன்று தொட்டு நன்முனி நதியின் பக்க
மின்னிடை பாகத் தோனை மேன்மையாய்ப் பூசை செய்தார். (௧௬)

வேறு.

காண்டியிந் நதிபால் கையிலையி னுறையூர் கண்டவர்க்கெளி தினின்முத்தி, பூண்டநற் றிருவைப் புனைந்துளான் றலமா புகழுள வேழதாம் புவியில், வேண்டினோர் தவத்தை விரும்பினோர்க் கெல்லாம் வினைத்தொட ரறுமெனவுரைத்தே, யாண்டவின் னதி யிற் கமைந்ததை யுரைப்பே னார்வமிக் குற்றுநீ யறியே. (௧௭)

## நிவாநதிப் படலம்

இத்தலத் தருகி லிந்நதி யுற்று ளிவடுணை கிர்ஷ்ணையென் பவளாங், கர்த்தன்ற னுரையால் வரநதி யாகிக் கடுகிவந் திவளு டன் கலந்தாள், கொத்துளாள் பெரியாள் கோதைபின் சின்னுள் கூறுநற் பெயரெவை யென்னில், நித்திய சுவேதை நிவாநதி வெள்ளா றெனுமபி தானமா நிகழும். (கஅ)

விட்டுடன் போனவிழைவுள துணைவி கிட்டிவந் திவளுடன் மேவப், பட்டிகை கிழியப் பெரந்தநல் லுயரம் பாரினில் சிகரி போ லாக்கந், தொட்டதாற் றுணைவி தானுமவ் வாறுமய்த் துரிதமா யேகினுர் தொடர்ந்து, கட்டதா யிங்கு காமனை யெரித்த கடவுளைக் கௌரியைத் தொழுதான். (கக)

மலைமகள் மகிழ்ந்த மகினைன்முன் வந்து மாநதி மங்கையைப் பார்த்தா, ளலையுவந் தடிமேல் சரணமுஞ் செய்தா ளவளுநீ வாநதி யென்றுள், கலைஞரு மதுவே பேரெனக் கொண்டார் கனங்குழை நதியடி விழுந்தாள், தலைமக ளோடு தையலைத் துதித்தா டன்மையைத் தரணிபாற் கேளே. (உ0)

சோதியு நீயே சொற்குண நீயே சுயம்புநீ சொரூபியு நீயே
நீதியு நீயே நீதினு னமுநீ நேர்பர ஞானமு நீயே
யாதியு நீயே யநாதியு நீயே யகண்டபூ ரணமதா யமைந்தா
யாதினை யிசைப்பே னறிவிலாத் தமியே னடிமலர்ப் பெருமையா னறியேன். (உக)

வேறு.

சுந்தரியே துரந்தரியே சுகமளிக்குங் கருணைமிகு சோதி நீயே, யந்தரியே யெனைக்காக்கு மழகுதிரு வ்டிபணிய வறியேன்றுயே, யுந்தரமா யெனையமைந்தா யுத்தமியே யுனக்காரொப் பார்கண் டாயே, வந்தனையே யெனக்காக வரமளிப்பார் வே றெவரே வழங்கற் பாலால். (உஉ)

வேறு.

நித்தியா நந்தி நிர்மல சொரூபீ நீடுல கிரக்ஷகி நீயே
மெத்தறிவோர் சித்தமிசை மேன்மேலு முற்றவளும் விமலைநீயே
சித்தர்தொழு மடிதம்மைச் சிறப்பாக யான்பணிந்தே சென்மம் விட்டேன், கற்றவர்கள் மிக்கபுக ழானந்த நாயகியே காத்திடாயே. (உங)

வேறு.

அந்தமாய் துதித்தே யம்பா ளடிமலர் வணங்கும் போது
சுந்தரன் றூதனன சுயம்புவை நதியுங் கண்டா
டந்தனன் சென்னி தாட்குத் தவப்பலன் கண்டே னென்று
பந்தமாய்ப் பரமன் றன்னைப் பார்த்திவை துதிக்க லுற்றாள். (உச)

சங்கரா சிவனே சம்பு சதாசிவப் பொருளே சத்தாய்ப்
பொங்கரா வணிந்தோய் பூமான் கங்கொய்த புங்க மூர்த்தி
திங்களை யணிந்த சோதீ திரிபுர மெரித்த தேவே
பங்கமில் லாமல் காப்பாய் பரமனே சரண மென்றாள். (உரு)

பத்திரக் கலை விட்டுப் பாருளோ ருய்ய வெண்ணி
மித்திர மாக க்ஷேத்ர மிகமனம் விரும்பி வந்தாள்
அந்திர முறையுந் தேவர்க் கரசனு மாதி சேடன்
சத்திய முனைய டைந்து சார்ந்துயர் துயரொழித்தார். (உசு)

வித்தகா காலகாலா விழைவுட னடி னோர்க்கு
நித்திய மகிழ்வோ னுகி நீள்புவிக் கரசாய் வைப்பாய்
பித்தகா பேதைப் பெண்மேல் பெருகிய கருணைசெய்வா
யத்தனு னுனைய யடைந்தே னடைக்கல மடிமை யாமே. (உஎ)

என்றவ ளிறைஞ்ச வீச னிவடவ மெல்லா நோக்கி
முன்றிதழ் நினைவின் போலே மொழியும் பூ வராகன் றன்னைக்
குன்றலிற் புமானு வெண்ணக் குறையதைத் தீர்ப்பான் மாலு
நன்றுநின் றுதியா றீர்த்த புரீசனு நாமம் பெற்றேம். (உஅ)

வேறு.

அந்நதி யிடத்தி லம்பிகை யாளு மானுடன் சிவகணஞ் சூழ்ந்தார், வன்னமா முனிவர் தேவரும் வந்தார் வரமது வேண்டினள் கங்கை, புண்ணிய னுகப் புனலிடையிலிருந்து பொற்கொடி சமேதனு யார்க்கு, மெண்ணிய பொருள்க ளியாவுநீ யீந்தே யருளென வீந்தன னன்றே. (உகூ)

அணியராய்த் தேவர் யாரும்வந் துற்று ரருவரை முனிவரும் வந்தார், கணிதநன் வழியா மகமுதற் பருவங் கலந்திடுந் திதிகு டமதியிற், புனறிர னுதறி பொலியுநாட் போநீ பூவரா கப்பெ ருமாடான், குணமுடன் சென்றே நீள்கடற் படியிற் குறுகியே மணந்திடு வானே. (ஙo)

காணினு நதியை யாடினுநீரைக் கையினு லெடுத்ததை யுணினு, மாணுறும் பிறவி தொடர்ச்சிவிட் டொழிந்து வருகுறை யனைத்தையுந் தீர்ப்பார், வேணியோ னருளும் விசயமும் பெறுவார் வீந்துளார் தங்களி னென்பைப், பேணியிந் நதியி லுய்த்திடி னன்றிப் பிணமெரி தரினுமே முத்தி. (௯௧)

என்றுதான் சொல்ல விமையவர் சென்று ரிறைமுத டலாரு மேகினரால், நன்றிது வென்றே நன்மலர் பொழிந்தார் நதியெலா மிந்நதிக் கொவ்வா, வன்றுதொட் டின்று வரையினு மந்த விழா வினை யன்புடன் புரிவார், கன்றுரு மகத்திற் கருதிய திருநாள் கவினுமந் நதிமுதற் கடையே. (௯௨)

பின்னுமிந் நதியிற் பெருங்கதிர் மைந்தன் பிரமனு மனைவியோ டுற்றுத், தன்னுடன் சாபத் தவிர்ந்தினி திருந்தார் தலத்தினின் பெருமையைப் பேச, வென்னுரை யாமோ வியன்றமட் டுரைத்தே னிதற்குமுன் னிதனையே குறித்துச், சொன்னவிந் நதியிற் சூழரன் கோயிற் சோடச தலத்தினு மிதுவே. (௯௩)

நிவாநதிப்படல முற்றிற்று.
அக செய்யுள் கககக.

## திருவரத்துறைப் படலம்

முன்ன நாடணி நகரணி நதியணி மொழிந்தேம்
பின்னு மாமுனி வரவையும் பினைந்தலம் பெற்ற
சென்னி மாதுளான் செய்கையுஞ் செப்பமாச் செய்ய
பொன்னி றத்ததாணந்தியைப் போற்றியே புகல்வாம். (க)

வேறு.

தண்டகா வனத்தினின்று தவஞ்செயுமுனிவான் மீகி
கொண்டகார் வண்ணன் றன்பாற் கூடிட நதியாய் வந்த
கெண்டையாள் மகிமை கேட்டுக் கிளர்வியப் படைந்து வந்து
பண்டுள வாற்றி னூடேசுவேதையைப் பரிவாய்க் கண்டான். (உ)

கொண்டநற் றவவான் மீகி குலவிய விடையைக் கண்டு
பண்டைய வறிவா னின்னைப் பார்க்கவு மரிதாக் காதல்
கொண்டதந் நதியின் காதை கொடியனுக் குரைப்பா யென்ன
விண்டுவை யடைந்த வந்தநதியின்சீர் விளம்பக் கேட்டான். (௩)

வேறு.

எத்த லத்தினு மித்தலம் பெரிதிதன் றன்மை
பத்தியுற்றிடப் போதரா பலன்வகைக் கெட்டா
சித்தரானவர் சிறந்தடைந் திதிற்றவஞ் செய்தார்
அத்தனற் புகழளவிட லார்கொலோ வறிவார். (ச)

என்னசொல்லுவே னித்தல மெல்லையி லுகந்தான்
முன்னமாகிய முதலவ னுறைந்திவண் பேரான்
பின்னனுயகன் பேசிடு மூர்த்தியாச் சிவந்த
வன்னமாகியோன் வழங்கிடும் வரம்பல வம்மா. (ரு)

பண்டைநாளையிற் பவனனு மனந்தனும் பகைத்துச்
சண்டைசெய்திடத் தரங்களைச் சகலருங் காண
வண்டர்நாயகன் வாழ்ந்திடு மேருமா மலையின்
கண்டவுச்சியை மூடினன் கடுவுளோன் கனன்று. (சு)

மூடிக்கொண்டுபின் மேருவின் முடிகளி லொன்றை
ஈடுமாருதி யசைத் திடின் வீரனீ யென்றுன்
கூடலாவதோ வச்செய னமக்கெனக் குறித்து
நாடலாயின னுரத மாமுனி தனையே. (எ)

வேறு.

நாரத னோடி வந்து நல்லிசைக் கூட்டிப் பாடச்
சீரிய வனந்தன் கேட்டுச் சிரமசைத் தாட நின்ற
வீரிய னுன காற்று விசைகொடு மோத லாலே
பாரிய சிகர மூன்று பாரினில் வீழ்ந்த தம்மா. (அ)

இவ்விதத் தன்மை கண்ட வேந்தலா மனந்தன் சீறித்
திவ்விய விசையிற் காது திரும்பிடுஞ் சமயந் தன்னில்
கௌவையில் வலியால் வென்ற கள்ளனை வெல்லத் தானுஞ்
செவ்விதா மித்தலத்திற் றிகழ்தவ நெடுநாட் செய்தான். (கூ)

வேறு.

ஆறுமாறு மாறுமாறு மாறுமெட்டு ✡மேதவிர்த்
தாறுமாறு மாறினோடு மாறுமைந்து ✡✡மன்றியே
யாறுமாறு மாறுபத்து மாறு *மொன்ப தாகவே
யாறுசென்னி யைந்துளானை யகத்திருக்கச்செய்தனன். (க0)

✡ குரோதம் ✡✡ மன்மதன் *சௌமியம்

## திருவரத்துறைப்படலம்

வேறு.

எந்தவிட யமுங்கவரு மிதயமதை வசப்படத்தி
முந்தியநல் லறிவடக்கி மூர்க்கவழி முயலாமற்
புந்தியினை யரன்பதத்திற் புகவிட்டே பொலிவுபெற
நந்தலிலா வருந்தவத்தை நாகவிறை புரிகின்றான். (கக)

வேறு.

பொறிபுலன் வழிசெலா தடக்கிப் புந்தியை
நிறைபெரும் பொருளிடை நிறுத்தி நேயமாய்க்
கறைமிடற் றண்ணலைக் கருதி யூண்டுயி
லறுதிபெற் றிருந்தன னருந்த வத்தினே. (கஉ)

வேறு.

கொண்டநற் றவத்தோன் மழைகுளிர் பாரான் கோடையை மனதிலே யெண்ணு, னண்டிய தவத்திப் புகையழற் கூடி யமரு மெண் டிசைகொளா தப்பால், மண்ட வமரர் பயமடைந்தோடி வழங்கின ரரனிடை யிதனைப், பண்டுநா னறிவே னவனெனைக் குறித்துப் பன்னெடு நாட்டவம் பயிலல். (கங)

வேறு.

என்றமரர் தமக்குரைத்தே யீசனவ னனந்தனிட மேகக் கண்டே, யொன்றியநன் மனத்தோடுந் துதிசெய்து நமஸ்கரித்தே யுன்னைக் காணப், பொன்றலிலா வித்தலத்திற் றவம்புரிந்தேன் புண்ணியனே பூதநாதா, வின்றெனக்கைந் தொன்றுரு மெழிலு ருவைக் காட்டெனக்கென் றிசைத்தான் சேடன். (கச)

அண்டர்பிரா னவ்வுருவத் தொடுவரவே யனந்தனுந்தானன் போ டேத்தி, மண்டுபுகழ்ப் பணியிறையே வேண்டுவர மென்னெனவே மருவுநாமங், கொண்டிடவென் பெயராலே யிப்பதி தா னருள்வையெனக் கொடுத்திட் டையன், உண்டுகொலோ வரமினியென் றுரைத்திடவே யனந்தனுந்தா னுரைக்கலானான்.

வேறு.

முன்னம் வாயுவோ டென்வலி காட்டிட மேருத்
த ன்னமாமுடி படத்தினாற் றடுத்துறும் போது.

பன்னுநாரத மாமுனி வந்துபண் பாடக்
கன்ன மீந்துநற் றலையசைத் திடவது காலம். (கசு)

வாயு மீறியே மும்முடி கொண்டுபோய் மறைத்தான்
ஆய காரியந் தீதுசெய் யவனையா னுன்னை
நீய ருளவே வேண்டுமென் றிரந்திட நிமலன்
பாய வாயுவாய் நானுமுற் றிருத்தாற் பலியா. (கஎ)

வேறு.

ஆயினு முனக்குண் டளவுநீ யுன்னை வளித்தன னெனவுரைத் தையன், மாயமாய் மறைய வாயுவவை யுண்ணும் வகையினை மன்னுல கத்தோர்க், கேயுமா றரவத் துறையெனும் பேரு ளியைந்திடும் வநகரவச் சொருவ, சேயரத் துறையென் றுரைத் திடல் சான்றுந் தேர்ந்துநீ கொள்வையென்றிசைத்தான். (கஅ)

வேறு

இந்த நற்றவப் பெருமையை யியம்புறக் கேட்டே
முந்து மிந்நதி யேழ்துறைத் தலத்தினுண் முதன்மை
யெந்தை யாதென விசைத்திடக் கேட்டுமற் றவற்றின்
விந்தை கூறுவல் வேண்டிக்கே ளென்றனன் விடையும். (கக)

திருத்த மானதோ ராதிநற் றுரையதன் குணக்கிற்
பெருத்த தோர்திரு மாலயன் றுறையதிற் பெரிதே
வருத்தந் தீர்திரு மான்றுறை யதனிற்கீழ் மன்னு
கிரித்து றுந்திரு வாடுநற் றுறையதின் கிழக்கே. (உ0)

பண்டு ளான்றிரு வதிட்டநற் றுறையதன் பாங்கே
திண்டி றற்றிரு வரத்துறை தெய்வமாப் பதிக்கீழ்
கொண்ட நற்றிரு முடவன்றன றுறைப்பதிக் குலவு
மண்ட லூற்றபெண் ணுகட மெனுந்தல மருங்கே. (உக)

திருக்க ரந்துறை யகத்தியன் றிருவரத் துறையிற்
செருக்கு வான்மீகி வதிட்டன்றன் றுறைவயிற் சேர்ந்தா
னருக்கன் மைந்தனு மாடுநற் றுறையினி லமர்ந்தான்
றருக்கு மாற்றுறை சேர்ந்தனன் மிருகண்டு தவனே. (உஉ)

பின்னு மாலயன் றுறையினிற் பெருமைசால் ராகு
மின்னு மாதிநற் றுறையிலிந் திரன்மாண்ட வியனுங்

# திருவரத்துறைப்படலம்

கன்னிபின்னுள தொகையதாய்ச் சிவதலங் கலந்தார்
பன்னு சோடசத் தலமதாம் பாரின்மாற்கைந்தே. (உங)

பூத மைந்தினுக் கைம்பதி புகன்றது மறிந்தாய்
பேத மன்றிவந் தவைந்துமே பெரும்பதி யடையும்
யாது காரணந் தானெனி லெந்தலப் பெயரதி னீற்றுக்
கோத யல்லெழுத் தாமவை திருவரத் துறையாம் (உச)

வேறு.

பிறக்கி னுந்தலமிறக்கி னும்விழி சிறக்கி னும்பெயர்
நினைக்கினும், பிறக்க வும்புவி யில்லை காண்பரம னடியில்
வாழ்வுபெறு புனிதரென், றறப்பெரும்பலவு நூலு ரைக்குமுயிர்
போகு முன்னொருவ னஞ்செவி, திறத்த றத்துறையெ னப்பு நன்று
விடில் செனன மில்லையிது காணுமே. (உரு)

வேறு.

காது ரைத்திடுங் கருணைதன் மந்திரக் கவினாற்
றீத சுற்றியெச் சிவனுந் திருந்திடு மோக்க
மாது மந்திரத தகிமா மரன்பெய ரறையிற்
காது பெற்றபேற் றினையெவர் முடியுறக் கரைவார். (உசு)

பாலகாசியி னுயிரத் ததிகம்பார் விருத்தைச்
சாலமற்றதி னுயிர மதிகமித் தலந்தான்
காலவூழியின் காசியா மரத்துறை காண்பா
யாலுடன்வலஞ் சுழிக்கண பதியையு மறிவாய் (உஎ)

கங்கைநற்றல முளபல குறிகளுங் காண்பா
யிங்குவந்தரிச் சந்திர னிருந்ததே சான்றுங்
கங்குல் நீணறக கவுசிகன் புரமுமே கண்டாய்
பொங்குசானவி யினும்வெள்ளா றதுபெரும் புகழே. (உஅ)

வேறு.

மாதை நோக்கியே வராகனு மேல்முக மமைந்தான்
நீதி யம்பிகை யழைத்தனள் நிவாநதியென்று
கோதை நீக்கியே புனிதமே கொடுக்கும்வெள் ளாறு
மாதி யானுமே தீர்த்தபு ரீசனென் றறைந்தான். (உகூ)

நன்று நன்றுநீர் நவின்றத நாடிஞு மறியோ
மின்றி கூறிப்பின் னிங்குநின் றிறைவனைப் பணியச்
சென்று புண்ணியப் பேறெலா மடியனேன் சேர
துன்று றும்புனல் படிந்துயர் சிவன்றனைத் தொழுது. (௩0)

சென்று வந்துமே யனுகினுன் சேரவே வேண்டு
நின்று சொல்லிய பலவகைப் பொருளையு நினைவாய்
நன்று கேட்பஞு னிவிடை யருளென நவின்றுன்
குன்று ருக்குண நந்தியு முத்தரங் கொடுத்தான். (௩க)

தேடி மாமுனி தீவினை தீர்ந்ததென் றிசைத்தே
யாடி மாநதிப் புனல்படிந் தவனையே யன்பாய்ச்
சூடி மாமுடிச் சுருதியா லச்சொல்வ னந்தா
நாடி வந்தன ஞனிலத் தாலப மதனே. (௩உ)

கண்ட நன்மனுவியற்றியே கட்டட மதிலுங்
கொண்டல் வந்தடை குறிகளுங் குவிமலைக் கொப்பாய்
விண்ட மாமதிள் சிகரியா வரணமு மென்மேற்
குண்ட வாறகழ் வியப்பையு நோக்கினுன் குறித்தான். (௩௩)

தொண்டு செய்பவன் மூலம் வந்துளே தொழுதான்
வண்டு றுங்குழல் வல்லியும் வந்துமுன் வணங்கிக்
கண்ட மாதவ னம்பிகை திருவடிபலகால்
தண்ட மென்றடி பணிந்தனன் றரணியில் வீழ்ந்தே. (௩௪)

வேறு.

ஆதிசுந் தரியுநீ யனுதர க்ஷகியுநீ யண்டபகி ரண்டிநீயே
நீதிகுரு வன்னைநீ நித்தியகல் யாணிநீ நிமலவா னந்திநீயே
கோதிலா புராணிநீ நாராணன் சோதரி குரவுரு ரணியுநீயே
யேதிலார்க் குதவுநீ யெவரையுங் காப்பைநீ யேழைபங் காளிநீயே

வேதியர்கள் பூசிக்க வீற்றிருக் கின்றநீ மெய்யடிய ருளமாகுநீ,
மேதினியி லுன்னைவிட வேறெருவ ருண்டோவி ளம்புவார் ஜெக
தீஸ்வரீ, தீதிலா சந்திநி திவ்வியகுண பூஷணீ திருவடியிற் சேர்
ப்பவளுநீ, சோதியாய் நின்றிடு மரத்துறையில் வாழ்கின்ற சுத்த வா
னந்தவுமையே. (௩௫)

அந்தரி பரம்பரி நிரந்தரி துரந்தரி யமலபிர ணவரூபியே
தந்திரி கிருபாகரி சுமங்கலி மதங்கிநீ தத்வமசியானவளுநீ.

## நீலமலர்ப்பொய்கைப்படலம்

சுந்தரி புராகரி தயாபரி திவாகரி சுராசுரர் வணங்கு நிமலி
விந்தைமிகு சூலிமிகு நீலிவிழி சேலியே வேண்டினே னருள்பா
லியே. (நஎ)

வேறு.

விண்டு பின்னவ னேகலும் விமலனைக் கண்டு
கொண்டவைந் தெழுத் துளமுறக் கைசிரங்கூப்பி
பண்டை நான்மறை பாடிய பரமனைப் பகர்ந்து
தொண்டி ழைத்தவ னேதினன் பலதரஞ் சூழ்ந்து. (நஅ)

வேறு.

நாகம தடுத்தனை நாகம தெடுத்தனை நாகமது வேபூணினுைப்,
நாகம்நீ ருற்றனை யாகமுமை வைத்தனை நன்றாக மத்திலுற்றாய்
நாகநா டரியவனை நாய்க்கடைய னறிவனே நாகமலரணிபாதனே
நாகனால் வழிபட்டநன்னாக னுக்கருள்செய் நாதனே யருள் புரிவையே.
(நகூ)

வேறு.

செய்ய வேண்டிய யாவையுஞ் செய்துபின் சேர்ந்தோ
னுய்ய வேண்டிய துறுதிகொண் டோகையா னுடனே
துய்ய தான்யுகத் தொகையுளான் விடையனைத் தொழுதுக்
கையு வாயுமெய்க் கரணமு முரிமையாய்க் கலந்தான் (ச0)

திருவரத்துறைப் படலமுற்றிற்று

அக செய்யுள் கருக.

## நீலமலர்ப் பொய்கைப் படலம்

பண்டை நாடிகழ் பௌண்டரிக வாசுதே வன்றான்
அண்டொா னுதவன் யாருக்கும் வலியனு மரசன்
கொண்டல் வண்ணனுங் கண்ணனைக் குறைசெய நினைத்துசு;
சண்டை செய்தனன் சராசந்த னேடவன்ட சார்ந்து. (க)

எட்டி ரண்டுட னெட்டுமே முறைமுறை யெதிர்ந்து
விட்டி டாதமர் விளைத்திட மேவுமா விளைத்துக்
கெட்டலைந்துபின் கிளர்வட மதுரையை விட்டுக்
கட்டம் நீங்கியே துவாரகை யணுகினன் கண்ணன். (உ)

விட்டி டாமற்போய் வெகுவிதம் போரினை விளைத்தான்
துட்ட னல்மனக் கிலேசத்தாற் சோர்ந்துமே யவன்றன்
கொட்டம் நீக்கிடக் குறித்துவந் தித்தலங் குறுகி
நிட்டை யார்தவம் புரிந்தன னீண்டமா றுனும். (ங)

அந்த ரத்தினும் வானினு மம்புவி யதிலுங்
கந்த ரம்மெனக் கதுவிய தவப்புகை கடுகி
நொந்து மால்கொள வானவர் நோன்புறு முனிவர்
வந்டத ரத்துறை நாதனைச் சூழ்ந்தனர் வணங்க. (௪)

மெத்த நொந்தன மேலினிச் சகிக்கிலோ மேலோய்
நித்த வின்னலை நீக்குவாய் நெடியமா றவத்தைக்
கர்த்த னேயென கைலையன் கருணையோ டெழுந்தே
அத்த வத்தினை யொழித்திட மாயன்முன் னணைந்தான். (ரு)

ஏற்றின் மேல்வந்த விறையினைக் கண்டன னிறைஞ்சி
யாற்றி லேன்றுய ரையனே யவனைக்கொல் லெனவேபோற்றி
னன்வர மீந்திடு புராரியு மகிழ்ந்தேவேற்றி லானைத்தான்
வென்றிடத் தந்தனன் விமலன். (சு)

வேறு.

நேர்த்தியா யென்ன நெடுங்கணு லருவி நிலத்திடை வீழ்ந்திட விறைஞ்சிக், காத்திலை யையா கனகனைத் தொலைக்க கடுநர சிங்கமாம் போது, பார்த்திவ மூர்த்தி சரபமாய் வந்து பழைய வென்பலத்தைநீ கவர்ந்து, கீர்த்தியைக் கொண்டா யதுமுத லெனக்குக் கெழுவலி குறைந்ததை யாருளே. (எ)

தோத்திரஞ் செய்த தூயமா லவனைத் துலங்குறக் கைகளாற்றூக்கி,
நேத்திர சலத்தைத் தன்கையாற் றுடைத்தே நீள்வலி யருளினு னீச,
னுத்திர மடக்கி யழகனை யணைத்தே யாசையா மவைகளை யளித்து,
நேத்திர நீரா னிறைவிட நீலப் பொய் கையனைன் றுலகினி னிலவும். (அ)

வேறு.

நீலமே கத்தன் கட்புன னிலத்தினில் விழலால்
நீல மாமலர்ப் பொய்கையென் றறைந்தன னிமலன்
நீல கண்டனு நேர்த்தியா நெடும்பெயர் வகுத்தான்
வேலை யுற்றமால் மாதவா வென்று பேர் விழைந்தார். (கூ)

## திருவாலந்துறைப்படலம்

கங்கு னீநிறக் காகமா முருவமுங் கடத்தி
தங்கு மேனியும் பொன்னிறத் தரணிப னானா
னெங்க ணாயகா வெந்தையே யென்னையா ளுடையாய்
துங்க வெள்விடை யாயெனப் பணிந்தனர் துதித்து. (உரு)

என்று போற்றினா னிறைவனு மிசைமறை யவனுக்
கன்று கூறிய படியவ னவர்க்கதை யளித்தான்
ஒன்று றும்படி யந்நகர்ப் பார்த்திப னுறைந்து
மன்ற லாரத்தான் றன்பதிப் பொருளினை வரித்து. (உசு)

பண்டைநாளுள வாலய மானதாற் பணிகள்
கொண்டல் தாவிடு மதில்வகைக் கோபுரங் குயிற்றிக்
கெண்டை யின்விழிக் கவுரியின் னாலயங் கிளரச்
சண்டி கேச்சுர னாலயப் பணியெலாஞ் சமைத்தான். (உஎ)

பின்னு மாகமம் பேசிய படியெலாம் பிறங்க
முன்னர்த் தந்திடு நிலத்தினு மும்முடி யுதவி
இன்ன லன்றியே பூசைக்கு வேண்டிய வெல்லாம்
உன்னல் கொண்டவ னுதவினா னுவப்பொடு மொருங்கே. (உஅ)

அன்று தொட்டதில் விழாவெலா மரபுளி நடத்தித்
துன்ற லுற்றவுய் யானமுஞ் சோலையு மமைத்து
நன்று றும்படி புரிந்துதன் னாட்டிற்கு நடந்தான்
கொன்றை யான்பதி யடைந்தமை கூறினோ முனக்கே. (உகூ)

சொல்லி வந்திடு தலத்தினிற் சுருதியே முதலா
வெல்லை யிற்றவ மிழைததவ ரீறிலா தவரால்
சொல்லினும் பழி யகற்றிடுஞ் சிறப்புமிக் குற்ற
நல்ல தாந்தல மிதன் புடைநவின் றிடக்கேளே. (௩0)

திருவாலந்துறைப்படல முற்றிற்று

அக செய்யுள் ௩௩0

## திருவாதிதுறைப்படலம்

ஐம்புலத் தமையும் பாவ மனைத்தையு மாற்றி வைக்கும்
பம்புநற் பரமன் வாழும் பதிதனைப் பகர வெண்ணி
லும்பரும் முனிவரி யாரு முரைக்கொணா முதன்மை யுற்ற
சம்புவின் றலத்தைச் சார்ந்த சத்தநற் றுறையி லொன்றே. (க)

கண்டிடு மிதன்மே லாலு கடிகையா மதனுக் கப்பா
லெண்டக வளைத்து நல்கு மெழிலாதி துறைய தென்ப
ரிண்டைசே ராதி சத்தி யீசனாமிறைவ னாமங்
கெண்டையங் கண்ணா ளாமங்கிளர்தரு பெரிய நாயகியே. (உ)

வேறு

தூக்கல் செய்திடவே முடிவுறா தெவர்க்குந் தூயவித் தலத்தினின் மேன்மை, யாக்க மெண் வகையு மமைதரு சித்தி யத்தலமடைந்தவ ரடைந்தா, ரேக்கமாம் பிறவி யெடுத்திடார் பின்னுமிடைவரும் பிணிகளுஞ் சாரார். நோக்குறு மளவின் மிகுமகப் பலனாநோற்பிற்னுந் தவப்பயன் மிகுமே. (ங)

வேறு

நம்புமாமுனி வரனவ னத்திரி நாமன்
பம்புநற்றவப் பகுதியின் மேம்படு பண்பான்
துன்ப மென்பதைக் கண்டறி யாதவ டுய்மை
யின்ப மீந்திடு மிவன்மனை யெழிலுனு சூயை. (ச)

கற்பின் மிக்கவ ளருந்ததி தன்னையே கடுப்பாள்
பொற்பு மேனியின் பொன்னுல கதனினுமில்லை
சிற்ப வேலையிற் செழுங்கரந் தேர்ந்தவள் சிறப்பாள்
கற்க வேண்டினோர்க் கருளுவாள் கருணையே மிக்காள். (ரு)

இல்லற மதனிலே யிவர்கள்வா ளாளையி லொருநாட்
சொல்லு நல்லிசை நாரத முனிவனாந் தூயோன்
பல்ல நாளுமித்தோகையாள் கற்பினைப்பழிச்சி
எல்லை யில்புவி யெவருமே யறிந்திட விசைப்போன். (சு)

விந்தை யாகநல் லிருப்பெனுங் கடலையை வேண்டி
பந்த மற்றநற் றிருமகள் வாணிபா ரதிபாற்
கந்த நாண்மலர் கழலிணை கசிவுற வணங்கி
வெந்த சுண்டலா யளித்திடு மென விளம் புற்றான். (எ)

எந்த நாளினமெவருமே செய்திடா ரிதனை
யந்த நாளிலெம் மான்முடி யிங்கொலோ வென்று
தந்த வார்குழ லாரவர் மூவரும் கழறச்
சந்த மேவிய வத்திரி முனிமனை சார்ந்தான் (அ)

கிரண மேற்கொளு நாரதன் கிட்டலு முனியத்
தருணம் வம்மென வாசனஞ் சடுதியி லமைத்து
கிருண யத்தோடு மிருத்தியே முகமனுநிகழ்த்திப்
பருணசா லைக்குநீர் வந்தவா றென்னெனப் பகர்ந்தான். (கூ)

பாங்கு கொண்டவிக் கடலையயைப் பக்குவ மாக்கி
யீங்களித் திடுகயான் வந்தது மிதற்கென விசைத்தான்
ஆங்கு யர்ந்திடு மம்முனி பன்னிமுந் தானை
வாங்கி மந்திரத் தாவிமீ தெழவறுத் தீந்தாள். (க0)

பத்து நாலுள வுலகத்திற் பக்குவம் பாரேன்
கத்து வாரிதி சூழ்புவி யதனிலுங் காணே
னித்த கைப் புரி வோரென லியம்பிமுன் சொன்ன
முத்த வாணகை யார்முன்போய்க் கொடுத்துண மொழிந்தான்.

வெந்த தானவிக் கடலையை விழைவுடன் கண்டு
யெந்தி டத்தினி லெவர்களா லளித்ததென் றிசைத்தர்
ரிந்த னங்களை யெரித்திடு மெரிக்கெரி யிணையாள்
சுந்த ரத்தினுங் கற்பினுஞ் சொல்லொணா திணையே. (கஉ)

தண்ட காரணி யத்துள வத்திரி தவத்தாற்
கொண்ட நன்மனைக் கோதையாள் கொடுத்தன வீதைக்
கண்டி ரோவெனக் கற்பினின் மேன்மையைக் காட்டி
விண்ட மாதவ முனிவனும் விரைவுட னகன்றான். (கங)

வேறு

அகன்றனன் முனிபு மப்பா லவமதிப் பதிக மாகிப்
புகன்றிடு மங்கை கற்பைப் போக்குவ மென்றே யெண்ணி
நகம்பெரு முலைமூ வோரு நாயகர் தம்மை நோக்கிச்
சகந்தரு தலைவீ ரன்னாள் கற்பினைத் தவிர்ப்பீ ரென்றார். (கச)

பகவர்தம் மாதர் மூவர் பகர்ந்திடு மொழியைக் கேட்டு
பகவனார் மூவர் தாமும் படிமிசைப் புருடராகிப்
பகவன்றன் சத்தி பெற்ற பதியிலாச் சமயம் பார்த்து
மிகவன்பி னாடை நீத்து வேண்டுவம் பிட்சை யென்றார் (கரு)

நித்தியம் மூவர் கேட்ட நினைவையுங் குறிப்பும் பார்த்துக்
கத்தனன் பூசைக் காகுங் கமண்டல நீரை யள்ளி
சுத்தநன் கற்பு மேன்மை சூழ்ந்திடிற் சொல்லு முன்னே
அத்தர்நீர் பாலராவீ ரென்றலு மாயி னாரால். (கசு)

ஆங்குதன் பதியை யெண்ணி யம்புனல் தெளித்த லோடும்
திங்கலாச் சிறுவ ரானார் தேவியு மாடை நீத்து
பாங்கிபோ லமுத மீந்து பாலரை யேணை யிட்டா
டுங்கினார் பலநா ளங்கே தோய மூவர் தாமும். (கஎ)

இப்படி யிருக்க வீங்கே யேவின மூவர் தாமுஞ்
செப்பிடுங் கவலை யுய்ளார்செயல் மறந் தவர்களாகி
யொப்பிடா வீணை மீட்டு முயர்முனி தன்னைக் கேட்டார்
மைப்படி கண்ணாள் செய்யு மாயையின் வதிந்தா ரென்றார் (கஅ)

ஆனதா லாங்குச் சென்றே யவளைநீ துதித்துக் கேட்டாற்
போனபேர் வருவாரென்று புகன்றனன் முனிவனங்கே
தானது செய்ய நாணந் தாங்கியேதைய லார்தாங்
கானமே பெரிதாவுற்றவாதாதியந் துறையைக் கண்டார். (கசு)

அப்பொழு தங்கணின்றே யம்பிகை தவத்தைச் செய்தா
ளப்பொழு தாசிசக்தியீசனா ராங்குவந்தார்
ஒப்பிலாப் பூசை செய்தா ளுளஎமலிந் துரைத்தா ளங்கு
நெப்புறுங் கண்ணா னங்கு நெடுந்துய ரகலச்சொல்வான் (உ0)

திக்கிடை யுன்றன் சீர்த்தி தேவரா னவற்கு மில்லை
அக்கநன் மணியே குற்றமனைத்துமே வகல வன்பா
யக்கொடி மடவாள் பக்க மடைந்துநீ யவளைக்கண்டு
துக்கமாந் துறைகள் கூறித் தொழுதுநீ சாற்றுகொன்றான். (உக)

அவ்வுரை தலைமேற்கொண்டே யரிவையரிருவரோடு
மவ்வனுசூயை பாற்போ யறிவித்தா ரவைகளெல்லா
முவவுல கங்கள் போற்று முதலுமை மலராள் வாணி
கவ்வையை யொழித்தே யெங்கள் கணவரை யளிநீ யென்றார்

இப்படிச்சொல்லக் கேட்ட யெழிலனு சூயை தாழ்ந்தே
யொப்புள வர்க்கிய பாத்ய வுபசார மனைந்துஞ் செய்து
கைப்படுஞ் சிறுவர் தம்மைக் காளையராக்கி முன்போற்
றப்பெலாந் தவிர்த்து விட்டே தையலீர் கொண்மி னென்றாள்.

தங்க ணாயகரைக் கூடுந் தன்மையா லுளம்பூ ரித்தே
யெங்குள கற்பின் மிக்கா ரெவர்களு நின்னையேற்ப
பங்கமில்லாமல் வாழப் பல்லாண்டு பலவாயக்கூறித்
தங்கடா னங்க ளற்றார் தத்தமக் குரியாரோடும். (உச)

ஆலமுண் டவனைப் பூசை யம்பிகை புரிதலாலே
சீலமாந் தலத்தினாமஞ் செப்பாதி துறையாயிற்றான்
மூலமா மதனைக் கொண்டு முனிபல ருறைந் தாரங்கு
காலமும் பயனுங் கொள்வா ரீதன்றிக் கருத்திடாரே. (உரு)

என்னகர் விட்டுவந்திங்கிறிலா நாள்க ளாச்சு
தொன்னகர் தனிலே ராசன் றுரைத்தன மின்மையாலே
அன்னதா லூருக் கேக வனுமதி யருணீரென்று
மன்னவன் சொன்னா னிங்கு மாமுனி யுரைக்கலானான். (உசு)

சொல்ல வேண்டிய தொருதுறை யிருக்குரு சுருக்கி
னிலவி யம்புவே னிருபனே நீயதைக் கேட்பாய்
தொல்லை நாளுள தேவரு மறைதல மிஃதே
யல்லவா வதின் மகிமையைக் கேளன வழங்கும். (உஎ)

திருவாதிதுறைப்பட முற்றிற்று

அக செய்யுள் ஙருள.

--------

## திருக்கரந்துறைப்படலம்.

மதிபுன லணியு மாநிநன் மஹேசன் மருவுறு தலத்தையே கேணீ, துதியரத்துறைக்குக்காதமோரரையிற்சொல்லிடும் கீழ்த் திசை யதனிற், பதியுள தொன்று நாமமற்றதற்குப் பகர்ந்திடிற் கரந்துரையாகு, நதியதின் றென்பால் நாட்ட முன்றுடைய நாயக ரமருவாரென்றும் (க)

கழையொடு சாலி யரம்பையுங் கழனி கனத்ததெங் கதுவுமே சூழும், விழைவொடு பொழில்கள் விளங்குநன் குடிகள் விரிந்துள வூரினன் னாம, மழிவிலாத் தெய்வ நகரமாங் கோட்டை யழகிய பேரதற் காகு, மழைதவழ் பொதிகை யதிலுறை முனியுமாயனும் பூசை செய்திட்டார். (உ)

ஆனநற் றலந்தா னமைந்ததை யறைவே ன்றிஞரிலறிஞரே யறிவாய், போனதோர் யுகத்தில் புரந்திடும் பாண்டு மரபுளான் புனிதனாய் வந்தா, னானவனாகும் நரேந்திர னாமன் றான்வெகு தரணிகா வலனாய்ப், பானுசூழ் புவியைப்பாலனஞ் செய்தான் பகர் மனு விதிப்படி பாரில். (ரு)

ஆங்கவ னரச னான நாளதனி லனங்கனை யடக்கல னாகிப பூங்கணைத் துன்பம் பொருந்தி யோர்கனியைப் புகழ்மணம் புரிந்தினி திருந்தான், றாங்கமண்ணதனிற் சுதனிலா மையினாற் றவத்திலோர் தம்மருளாலே, தீங்கிலாக் குணமுந் திறல்வலி யூக்கந் திரண்டுள சிறுவனவந்து துதித்தான். (சு)

உற்றசேய் தனக்கு வயதோரீ ரேழி லுற்றதா யுலகுவிட் டொழிந்தாள், அற்றைநாட் சகல சாத்திரந் தீன்னி லழகனாய்ச்சிறுவனு மமைந்தான், மற்றுமோர் கரும மனமுடன் செய்தன் மாநிதி மறையவர்க் கீந்தான், பிற்றைநாட் டந்தை மீனகே தனனாற் பெரும்பிணி யுற்றுடல்வெதும்பி. (ரு)

காந்தைய ராசைக் கடக்கொணா ததனாற் கடிமணம் புரிகுவ னென்றே, யேந்துமென் மருகி யவண்மிக வெழிலா ளிசைவலா ளிலக்குமக் கொப்பாள், வாய்ந்தநன் மடந்தை வயதுளாளவளை வையகத்தோர்களு மறிய, ஆய்ந்திடு மாலை யணிகுவே னென் வவன்மக னதற்குமே நேர்ந்தான். (சு)

ஆதலாலந்த சித்திராங் கதையை யன்புடன் விவாகமே செய்தான், காதலா லிருவர் கலந்துறை நாளிற் கணவன்மே லன்பிலாளாகித், தாதவிழ் மலராடன்னுளத் தெண்ணந்தன்மகன் றன்னொடுஞ் சொல்லித், தீதிலாதுனக்கே யுரிமை யேயென்று திமொழிசெவிப்பட வுரைத்தாள். (எ)

சொன்னதைக் கேட்ட சுகணசாரங்கன் சுரோத்திரமடைத்துநீ சொல்லு, மன்னதோர் மொழிக்கு மமைவனோ வதுவும நீதியோடுறுபழியலவோ, முன்னைநர ளுளதிம் முறைமையோ பாவ மூவுலகத்திலு முளதோ, அன்னைநீ யுரைத்த கட்டுரையாலே காசிபோய் வருவனென் றுரைத்தான். (அ)

காரிகை நாணிக் கருதுவாள் யுத்தி காவல னறிந்திடினம் மைப், பாரிதா னலனென் றாக்கினை செய்வான் பதியைவிட் டோட்டியே விடுவான், கோரினாள் முன்னஞ் சிறுவன்மேல் வைத்துக் கூவிடில் குறைவராதென்று, சேரவே மனது திடம்பெற வெண்ணித் தெரிவித்தா ளரசனு மறிந்தே. (கூ)

## திருவாதிதுறைப்படலம்

மாயமா துரைத்த வார்த்தையைக் கேட்டு மன்னனும் மனம்பொறானாகித், தாயிடஞ்செய்த தப்பினான்மகனை தனிக்கரந்தா ளையுந் தறித்துத், தீயனின் பாவந்தீர்க்குவேனெறான் கொலை செயுந்தீயரையழைத்துச், சேயனைக் கொடுபோய்ச் செழுஞ்சுரம தனிற் சீக்கிரங்கால் கரஞ் சிதைமின். (க0)

என்றுதான் சொல்லியேந்திழை தனக்கு யிணைந்திட வகை மிக வுரைத்தே, கொன்றுறப்போன குழவியின் வலக்கால் குறிப்படி வலக்கரங் கொண்தார், கன்றியே யெவருங்கருமமென்ற கன்றார் கடுங்கொலை யாளருங் கடந்தார், இன்றிவன் புரிந்த பழியென வந்திங் கெய்தின விரவினி லிருளே. (கக)

அண்டர்கள் முனிவரியாருமே துதிக்க மறிஞரிலறிஞனாஞ் சிறுவன், கண்டுமுற் காலஞ் செய்வினைப் பயனால் காணுமூழ் வினையிது வென்றே, கொண்டவிவ்வுலகில் நிறைந்தினி திருக்கும் கோலமே நீயெனைக்காவாய், பண்டுநீகூட லாடிய பரமாபா ருனக் கழகதோவென்றான். (கஉ)

அந்தமாய்ச் சொல்லியழுமவ னுரையை யண்டரக் ளறிந்ததே யன்றி, முந்தியங்குறையும் பூவராகனுமே முறைகளைக் கேட்டருள் செய்யாச், சிந்தையாய் நின்றான் சேர்கறை மிடற்றான் றிருவருள் மேம்படப்புரிந்தான், விந்தையாமதனை விளம்புவோ மென்று வேடுவ முனிவனும் விரித்தான். (கங)

முந்திய யுகத்தி னிருதராயிருவர் வில்வலன்றுணைவன்வா தாபி, விந்தையாமி ருவரிங்குளாரவரோ வீரமும்மாயமும் மக்கார், தொந்தமாம்பாவந் தொலைத்திடும் வாரணாசியின் வழிகளிற் றொக்கார், சுந்தரமான யாத்திரையோர்கள் சோறுணும் மடமெனத் தொடுத்தான். (கச)

வந்தவர்தம்மை வகையுட னழைத்து வழங்குவான் கறிக ளோடன்னம், பந்தியில் யாரும்முண்ட பின்னந்தகக்றிவகை யமி சமாமவனைத், தொந்தமாய்விஞ்சைத் துணிவினால் லழைக்க வுண்டதோர் வயற்றி நின்றுடனே, வந்துரங் கிழித்துவாவெனக்சொ லமுன் வருவன் வாதாபியென்பவனே. (கரு)

இப்படியாக விருவரும் வழியி லெவரையுந் தீங்குசெய் திருந்தார், மைப்படு கும்பமுனிவனு மதுவேமார்க்கமென்றவ்வி டம் வந்தான். தப்பிலாமுனிக்குதுத்தக்கநல்விருந்து தந்துபின் றம்பியைக்கூவ, ஒப்பிலாமுனிவ னோர்ந்திதை யொழிக்கவுன்னியே சீரண மென்றான். (கசு)

மட்டிலான் சொன்ன மாற்றமுன்னவனும் மறலிதன்னுல கிடைப்புக்கான், விட்டிடாத்துணைவன் வெகுதுயருழந்து வேண்டிநன்முனிவனை வெகுவாய்ப் பட்டதுபாவம் போக்கிமுன் செய்து பாழ்வினையொழிந்தது வேண்டி, இட்டமாய் வேள்வி யியற்று வேனதற்குக் காவல்நீயிருவென விசைந்தான். (கஎ)

கொட்டமாயிருக்கு மசுரர்வாழ் நாளுங் கொடும்பசித் தீயி னாலொழிந்தான், கட்டமாமிவனைக் கடத்தலே நினைத்து கண்ணு தலவனை யேகருதிச், சட்டமாய்வேள்விசமைத்தனனாங்குச்சர் சனர்வந்தவர்க்கெதிராய், இட்டமாம் வரமீந்தன மென்றலைந்த வில்லவன் முனிவனாயிருந்தான். (கஅ)

அப்பொழுதங்கே வகத்தியரா லேயமைந்தவன் பேரகத்தீசன், செப்பிடும் முறைமைப்பேரருள்செய்பூரணி தான் சேயமு வத னையேகேட்டுத், தப்பிலாதவனாய்த் தனியனாய்த் துயரந்தாங்கிட வசமிலாதவனாய், இப்புவனத்திற் கிறைவனாய்ப் பின்னுஞ் சிறுவ னாய்யிருந்ததை யோர்ந்தான். (கசு)

அய்யனே யிங்கு வழுகுரல் யாரோ வஞ்சலென்றவனை நீய ளிப்பாய், துய்யனே யென்றுதூய வளுரைத்தாள் துர்க்கையை வென்றகாலோனும், கொய்யுநற்காலுங் கரமுங்கூடிடவே குறு கினார்வளர்ந்ததக்குறையே, அய்யனு மெழுந்தே யரனடி பணிந்தே யண்ணலைப் பாடினானனந்தம். (உ0)

விண்ணவர்மலரின் மாரி விட்டிறைத்தார் வீணையை நார தன்றொடுத்தான், பண்முறை முனிவர் மங்களமறைந்தார் பல்லி யந்து வைத்தனர்பலகாற், கண்ணனுமயனுஞ் சுரரொடுவிண்ணா கண்டலன் முதலியோர் வந்தார், கண்ணுதலோனுங் கருணை செய் தளித்தான் காவலனிதனையே காணான். (உக)

புதுமையைக்கேட்ட புகழ் நரேந்திரனும் புகழ்மகன்றன் னையேபுல்லிச், சதிசெயும்மனையைக்கொலை செயும்படியாய்ச் சாற்றினான் சகலமும் மறிந்தான், விதுவணிபரமன் விரும்பிவாழ்கோ வில் விழைவுடன்றேடி வந்தடைந்து அதிலுள கோவிலனை த்தையும் புதுக்கியழகுடன் திருவிழாவமைத்தான். (உஉ)

நண்டதற் கருள்செய் நாதனல்லருளா னாட்டினிற் றுன்ப முற்றோர்க, ளெண்டிசை யுள்ளோரிங்கு வந்தமர்ந் தேயெழினதி

மூழ்கியே யென்னைக், கண்டுமை யோடுங் கருத்தினி லிருத்திக் கைபொழு முனிவனைக் காணிற், பண்டுள குறைபோய்ப் பரகதி யடைவார் பாரெனப் பரமனும் பகர்ந்தான். (உச)

தண்டுலஞ்சிலதைத் தான் கொணர்ந்தேனும் தக்கநற்பணத் தினாலேனும், கொண்டதிலமுது கொடுத்திடிலொருவர் கொள்வ தேயாயிரத்ததிகம், விண்டருமமர ருலகமேத்திடுவர் மேன்மை கொள் விமலன்பாலடைவார், பண்டுபோல்காலுங் கைகளுங் கண்டபாலனைப்பட்டணஞ் சேர்த்தே. (உச)

சத்தியன்னீயே சற்குணன்நீயே சற்புத்ர சிகாமணிநீயே இத்தலமரசு செய்கென விடுத்தே யிறையுமே தான் றவமுற்றா னுத்தமலதலத்தின் பெருமைகளெல்லா முணரவே பூபதிதனக்கு வித்தைவே டுவரும் விளம்பினாரென்று விரித்தனர் புராணிகர்விள ங்க. (உரு)

திருக்கரந்துறைப்படலமுற்றிற்று.
அக செய்யுள் ஙஅஉ

## உபந்நியாசப்படலம்

படித்திடுந் தலங்க ளேழையும் பாரிற் பகரினும் புனித மென்றாங்கு, அடுத்ததை யன்பு வைத்தரன் பணியை யழகதாய்ச் செயவரே யானால், கொடுத்திடும் பலன்கள் யாதுநீ ரதனைக் கோவையாய்க கூறென வவனு, மெடுத்ததின் பெருமை யியம் புவேன். (க)

வேறு

மிக்கவெட்டொடு மெட்டெனுங் கலையினை விரிவாய்
தக்கு மிம்மொழித் தரணிபா லெவர்களு மறியச்
சிக்கு நற்பய னெவற்றையுஞ் சிந்திடா தெடுத்துப்
பக்குவத்துட னுரைத்தன னுள்ளத்திற் பதிய. (உ)

ஆன தாலதை யறிந்ததைக் கேட்டதை யவளாச்
சேனை சூழ்புவிக் கரசெனச் செப்புவே னுனக்கு
கான முந்துறு மாதியாந் துறைதனைக் கண்டு
தான மேசெய வாதியீச் சுரன்பதந் தாழே. (ங)

பெருத்தெ ழுந்திடும் பெரும்பொரு ளளித்திடும் பிசகாக்
கருத்தி லுற்றிடு வருத்தமுங் கடத்திடுங் கனலில்
உருத்திடு முள மருட்டினை யொருநொடி யோட்டும்
வருத்த வைம்புலன் வாடிவந் தவரக்கவை வாங்கும். (௪)

பின்பு ரைத்திடு மாலயன் துறை பெரும் பேற்றை
யன்பு றத்தரும் வலிமையு மேவிடு மகத்தோர்
தன்ப லத்தையுங் கொடுத்திடுந் தரணிசெய் வினையை
முன்ப கற்றிடில் மோக்கமு முடிவினிற் கொடுக்கும். (௫)

நல்ல மான்துறை தலத்தையே நாடிநின் றவர்க்குச்
சொல்லு நாரியுஞ் சுதருடன் வாழ்வுசுத் தமுமே
எல்லை யில்லுறுங் கள்வரு மவனிட மெய்தார்
மல்ல லம்புவி மன்னவ மனத்தினில் கொள்ளே. (௬)

தந்தை தாய்தருஞ் சாபமுந் தன்னைவிட் டோடு
நிந்தை யென்பது நெடுநிலத் திருத்திடா தொழியும்
முந்தை யோர்தம் பங்கின்மேற் பங்குகொண் முரணும்
புந்தி நேருறும் பிழைகளை விரைவினிற் போக்கும். (௭)

கஷ்ட நீக்கிடுங் கருதிய தளித்திடுங் காயக்
குஷ்ட நீக்கிடுங் கோகுலப் பதவியுங் கொடுக்குஞ்
சிஷ்ட ராமுனி வதிட்டன்றன் றுறையினைச் சேர்ந்தால்
இஷ்ட மாப்பலன் மாநிலத் தடைகுவனினிதே. (அ)

காட்டு மித்தலங் கருதிய நூலறி வனைத்து
மீட்டு மிச்சையு மிறையவன் பதவியு மீயும்
மீட்டு நால்வகைச் சேனையு மேதினி முழுதும்
கூட்டி வைத்திடுங் குறுகிடி லவ்வரத் துறையே. (௯)

அன்றி யூக்கம தளித்திடு மாம்பல னெல்லா
மொன்று கூடிடு முளம்புறம் போடிடா துறையுங்
குன்றெ னும் புயமற்றதிற் குறைகெடுங் குணமாம்.
வென்றி யில்லவ னிருப்பினு நினைப்பினும் விறலாம். (௧0)

திருக் கரந்துறை யிறுபிணி யனைத்தையுந் தீர்க்கும்
பெருக்கும் வித்தையும் பெருகும் விஞ்ஞானமும் பிறங்கும்
செருக்குந் தீயவை யனைத்தையும் போக்குறுஞ் செல்வ
வருக்க மியாவையு மளித்திடுங் கடைத்துறை மன்னா. (௧௧)

## உபந்நியாசப்படலம்

விண்டவித்துறை யேழுமே முறைமையின் விழையக்
கொண்ட விட்டுறுங் குறிகளென் றுளந்தனிற்கோடி
விண்டு மார்க்கத்தைத் துறையென விளம்பினார் விழைவாய்க்
கண்டு கொண்டவர் வீடதைக் காணுவார் கருதில். (கஉ)

அன்னமா மடஞ் சத்திர மாலயஞ் சமைத்தோர்
சொன்ன கோபுர மேரிசூழ் பொய்கையே தடாகம்
பன்னும் வேதநற் பாடசாலைம்முதற் பலவு
முன்னி யாக்கினோ ரடைகுவர் முடிவினன் மோக்கம். (கங)

வேறு

என்று மாதவ னியம்பலு மெழின்மிகு திரிபுவனன் றான்
துன்று மாலயந் திருமதிற் சூழுறைத் தேவர்தங்கோயி
லென்று கூவனால் வீதிக ளுயர்தரு பூரலர்ச் சோலை
ஈன்று நாடக மண்டப நளிபுனற் றடமெலா மமைத்தே. (கச)

வேறு

நித்தியம் பூசை குறைவிலா திருக்க நிவேதனமமுதுநல்லெ
ண்ணை, சத்திய விளக்கோ டுள்ள வாகனமுஞ் சாத்திடு ரதமுத
லிவையும், எத்தல மேனு மினையிலை யென்ன வேழ் பிரகார
முமெழிலாய்த், தத்தமாயிவைக ணடைபெறு வதற்காச் சாச்வத
பூமியும் விட்டே. (கரு)

வேறு

காடுக ளழித்துப் போக்கிக் கனத்த பட்டணமாச் செய்தே
பீடுறும் பிழைகள் பார்க்கப் பெருமதி காரி வைத்தே
நாடு மென்னகர மேக நல்விடை தருவீ ரென்றான்
வீடுநீ சேர வின்னே வேந்தனே யேகுகென்றான். (கசு)

சொந்தமா மூருக்கேகிச் சூழ்புவி யரசு செய்து
வந்த வ்வரசன் றானும் வழிவழி குலத்தோர்க் கெல்லாம்
அந்தவேழ் துறைக்குந்தானே வாதிக்கம் பதிவு செய்தே
சிந்தனை செய்து வந்தான் செகத்துளோ ராருங்காண. (கஎ)

உபந்நியாசப்படலம் முற்றிற்று.

## திருவரத்துறைப்புராணம்

அரத்துறை நாதன்வாழி யடியார்க ளாரும் வாழி
நிரத்துறை யேழும்வாழி நேர்ந்துறை யுற்றார் வாழி
விரித்ததை யுரைத்தார் வாழி வேந்தன்மா மறைகள் வாழி
தரித்ததைப் பார்ப்போர் வாழி சகலமும் வாழியாமே (க)

தேவர்கள் யாவரும் வாழி திருநீறஞ்செழுத்தும் வாழி
மூவரும் வாழி பின்னு முத்தமிழ் நூலும் வாழி
யாவரும் வாழி யிந்தவரத்துறைப்புராணங் சொன்ன
பாவலர் கற்றோர் கேட்டோ ரெழுதினோர் படித்தோர் வாழி (உ)

திருவரத்துரைப்புராணம் முற்றிற்று

அக படலம் 20க்கு கூடிய செய்யுள் ஙகூகூ.



ஓம்கணேசாயநம:

# திருவரத்துறைநாத சதகம்.

## காப்பு

*திங்கள்சிரமிருத்துந்தேவன் றிருவருளாற்*
*சங்கவரத்துறையான்றன் சதகம்- அங்கமுறப்*
*பாடுதற்கு வந்துதவும் பார்வதியாரீன்ற வொற்றைக்*
*கோடுடையானென்று நியைக்கொண்டு.*

## சிவபக்தர்கள்

*பூவுலகிலகத்தியன் சண்டீசனச்சுதன்புவியாண்டபாணாசுரன் பொறுமையில் தூர்வாசன் புனிதமார்க் கண்டனும்புகழுற்றநந்தீசனுங், காவறரு பிருகுவுங் கண்ணுவன் மரீசியுங் காணுமாணுபமன்யுவும், காசில்சீர்ததீசியுடன் கவுதமமுனிவருங்காணுபதின் மூவோரையும், ஆவினிவரம்புமதி யணிகின்ற வண்ணலுக்கான சிவபக்த ரென்பா, ரவருமவ்வப்பரொடு சம்பந்தர்சுந்தரர் மாணிக்கராயகுரவர், யாவரையுந் துதிசெயினனுதினம் பாவமுமனுகரமனீங்குமதனால், அகத்தினிடை யகலாமல் நிறுத்திவையனுதின மரத்துறைப்பதி நாதனே. (க)*

## விஷ்ணுபாகவதர்கள்

பேருலகில் நாரதன் பராசரன் பிரகலாதன் பிழையற்ற புண்டரீகன்
பீடுசொல் வியாசமுனி சுகனம்பரீஷனொடு பின்னருறுநற் பீஷ்மனே சீருலவு சனகன்னுருக்கு மாங்கதன் விஜயன்செய்பதா ல்பியரிஷியுமே (ன் செப்புமாவலி யனுமன் விபீஷணச்சிரஞ்சீவி செகமேத்து வசிஷ்-னுந்தா பாருணவுதான்கொண்டமாயவர்க்கமைந்திட்டபக்தரென்றிவரையறைவார் பாரதனி லிவர்பெயர் பண்போடு துதித்திடில் பரிசுத்ததின மெய்துமே ஆரணியு மண்ணலை யனுதினந் துதிசெய வறிந்துகொள் ளவனிமீதி லகத்தினிடை யகலாமல் நிறுத்திவையனுதினம் அரத்துறைப்பதிநாதனே (உ)

## ஒவ்வொருவர்க் கொவ்வோர்சமர்த்து

பூவுலகிலுதித்த வரிலொருவர்பேசிடவல்லர் புதிதொருவர் பாடவல்லார்.
புகழ்கின்ற விசையோடுபடித்திடுவரேயொருவர்புதியநன் னூலையெல்லாம்

நாவுறுதல்வாணியெனநற்பயன்சொல்லிடுவார்நல்லமுத்தெழுத்தாகவே
நானிலத்தெழுதிடுவார் நல்விகடகவி யனாய்நாட்டினி லொருவனாவன்
காவேறு தருவென்னாகாரென்னவீந்தொருவன் காசினியிலிசைபெருகுவான்
காத்தாலும்பலநாளுங்கடைசியிலிலையெனுங்கடுஞ்செட்டனொருவனாவான்
ஆவல்கொள்ளவரவர்க் கோரோருசமர்த்தன்றியனைத்து மேவாராதுகாண்
அகத்தினிடையகலாமல் நிறுத்திவையனு தினமரத்துறைப்பதிநாதனே (கூ)

## ஈதலின் பெருமை

யாரேனு மூலகுதனிலறமாக வீட்டுபொருளானதை விருத்திசெய்து
ஆடைநன் பூஷணமறுசுவை யுண்டியுமானபின் னதிகரித்தால்
மாரியதுமறுமையில் லதுவந்துதவிடுமார்க்க முண்டதனையோசி
மானிடர்தனக்குவெகுவட்டிக்கேயீவதிலுமாப்பொன்னுமனந்தமாகும்
வராததற்குவமை வந்திறந்தோர்க்கீயில் வழங்குவாரென்றனந்தம்
வருதமரினுள்ளோர்கள் வறுமைக்கிடங்கொடார் வந்தீவர்யாசகருமே
ஆரோடுபணிமதி யணிந்திடு மண்ணலை யறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல் நிறுத்திவையனு தினமரத்துறைப்பதிநாதனே. (ச)

## உத்தமமான வகை மூன்று

உலகுதனிலுதித்தவர் களெவராயினுந் தருமவழியினாலுற்றபொருளை
ஓங்குமுக்குற்றமுந் தீங்கென்றெழித்திட்டவுயர்மறை தவத்தோரிடம்
விலகிடவேதன்குறை விரித்தேத்தியீவது விளங்குமுதற்றானமென்பார்
வேண்டிவருமதிதி பரதேசிவிழியுணர்விலார்விரலிலார்முடவர்க்குமே
செலவுசெய்தளித்திடுதல் மத்திமமாகுமாஞ் செப்பினோமதமதானஞ்
சேரரிவைகைமாறுகண்ணோட்ட டம்பமாஞ்சேரச் சகாரணத்தால்
அலையுமதியுடையோனு மளிக்கிலது வீணதாமன்பர்க்கு மன்புசெய்வாய்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவைனு தினமரத்துறைப்பதிநாதனே. (ரு)

## தானபாத்திர பலன் விதி

தீதிலாப்பொருளைதனை யாவர்க்குமீவதுதெரிவைவிண்மாரிபோலாந்
தேருநீபதில்பேதமழைத்துளியினால்வருந்தேயாதசிப்பிமுத்து
கோதிலாக்கற்பூரங் கதலியிடைவந்திடுங் கொடுவிடநாகமமையுங்
குறித்தகடலதிலுப்பு பாலாழிநிற்பாலுகொள்ளுசெம்மண்ணில்சேப்பாம்
ஈதெலாமழைத்துளியின் காரணம்வருகினு மெழில்வஸ்து பேதமாகும்
ஈகின்றதானபலன் பாத்திரப்படியமையுமெவருக்களிக்கினுந்தான்
ஆதலாலறிந்தியுமவனடைவன்றானபலன்னைவர்க்குமாதாரமாம்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே (சு)

## ஓர்குணத்தினா லுத்தமகுணங்கள் போய்விடும்.

உலகதனிலுதித்திடுமானிடர்க்கிரண்டுகையதிலிடதுகைப்பெருகையோம
ஓங்கிவருமெதிரியின்குடுமிகைப்பற்றிடுமோதுபரிதனைநடத்தும்
பெலமசர்பேட்டிக்குமுன்பேசியாசிசொலும்பேசிடுஞ்சூதுமுதலாய
பேருள்ளகளவுவகையதனில்பின்னின்றிடும்பேதைமைப்புத்தியதனால்
கலைதெறியுங்கவிவாணர்மற்றவர்தமக்குமேகருதிக்கொடுப்பதிலையாற்
காசினியிற்சவுசாதிகாரமுனக்கென்றுதான்கழறினர்பேரியோர்களே
அலியெனினுமாருக்குமீவதேபெரும்பயனறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமாத்துறைப்பதிநாதனே. (எ)

## யாசகனிலக்கணம். (குவே

தாரணியில்மானிடர்கள்தனக்கில்லையெனநொந்துதாமொருவரைக்கேட்
தானினைந்திடுபோதுதாழ்ந்திடுஞ்சாணொன்றுதருமவனைக்காணவேகில்
சீரிலாததிற்பின்னுஞ்செப்புசாண்குறைவதாஞ்சேருமலனூர்சென்றிடில் (ம்
சிறப்பன்றிசாணதில்குறைவதாஞ்செல்வனகஞ்சேரிலத்தில்சாண்குறைவதா
ஏர்பிரபுசமயத்தைவினவில்சாண்குறைவதாமொழில்முகந்தானோக்கினால்
இருந்ததில்சாண்குறைவுயில்லையீயென்பதிலெண்சாணுமொருசாணதாம்
ஆர்பெரும்பரமனையான்போடுதுதிசெ யவறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகாலமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (அ)

## இதுவுமது

பார்க்கின்றபூளையினற்பமாம்பஞ்சுவதிற்பகருயாசகனற்பமாம் (டான்
பரக்காதிருப்பதேன்காலின்முன்னவனெனில்பகர்வாதராஜனானோன் (விட்
ஏர்க்கின்றவர்க்குமுன்னெதிர்ப்படிற்கேழ்ப்பரெனவெண்ணியேயொதுங்கி
ஏதேனுமில்லையெனஏற்பவர்க்கிசைத்திடிலிசைபெருமைதானகலுமே
கார்க்கின்றகாசினியில்கனலோபமாகுமேகருதினோர்க்கீயாவிடில் (ம்
காட்டினிடைசன்னியாசிதண்டதநம்போலவேகழன்றிடுஞ்செல்வமெல்லா
ஆர்க்கின்றவப்புவணியய்யனைப்போற்றிடவறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனதினமரத்துறைப்பதிநாதனே. (கூ)

## சோடசமஹாதானம் 16 அறிய.

நாகமதுகுதிரைபெண்சலமானசுவர்ணமும்நற்கம்பளம்வீடுதான்
நாடறியவுழையாடுநற்கபிலைகன்றுடன்நயசகடம்நன்பகடுதான்
தாகமொடுபூயுந்தயவாகுநாங்குலந்தாழாதகால்சந்கரம்
தக்கவுயர்துலாப்பாரந்தலையணைமொத்தையுந்தருதானம்பதினாறுதான்
பாசமுடனிதலையேயுவகையாவீவோர்கள்பரராஜர்கொண்டாடவே
பகரில்வெகுகீர்த்தியுடன்பாராளுமன்னராய்பரமனுக்கன்பராவார்

ஆகமதுதுதிசெயுமடியவர்க்கடியனேயருள் சிவிகைகொடையாளனே
அகத்தினிடையகலரமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (க0)

## குடும்பிக்கு ஆசிரமபலன்

பெத்ததன்மனையன் றிபிறர்மனைவியாரவர்கள்டேதொழில் பெற்றுவரினும்
பிரியமொடுசரசவகை செய்யினும் பேசிடான் பேர்பிரமசாரியாவன்
நித்தியமுமொருவர் தம்பொருள் வரவுநினைவிலான் நேர்தானம்பலகாலமும்
நிதஞ்செய்யுங்கிரகவாச்சிரமத்தனவனெனவறைந்தனன் றருமவியாசன்
சத்தியந்தப்பாமற்றரணியில் வருபவன் சார்ந்தவானப்பிரஸ்தன்
சாருசுகதுக்கமுஞ்சமனென்றிருப்பவன் சார்புவியில் சுத்தஞானி
அத்திசூழரவமணி அண்ணலைத் துதித்திடுமவனின்ன பலனையடைவான்
அகத்தினிடைய கலாமல்நிறுத்திவையனு தினமரத்துறைப்பதிநாதனே. (கக)

## புருஷார்த்தபலம்

புவிபிறந்தாரக்குதவி தபங்கொடை யொழுக்கமாம்புகழ்கல்வி நான்கதாகும்
புரியுமதுநீ ராடல் தானமுதல் நால்விர தமகொருந்துநய போஜனந்தான்
புவியுளானாயினுமமையு முச்சாகமொடுபலிப்பதே புண்ணியதோற்றம்
பகர்கின்ற அன்னபானதி பரமந்திராம்பாருலகிலடிமைகாத்தல்
குவுயுறும்பிணிதீர்த்தல் சிறைகாத்தல்புறங்கூறல் கூரறவைபிணமடக்கல்
கூரனோமிது வெலாந்தேகோ பகார மெனக்குறித்துமறைப் பொருளியம்பும்
அவித்தைவிட்டுனையடையுமன்பருக்கருள் புரியுமத்தனேயவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனு தினமரத்துறைப்பதிநாதனே. (கஉ)

## புருஷ நற்குணம்

நீண்டி டுமுயர் திணையிலுத்த தமக்குணமதாம்நினையாதவர்க்காயினுந்
நிகராத மெய்புரைப்பயன் படுசொனல்வார்த்தைநித்தமுஞ்செய்புண்ணியம்
வேண்டுவதுவாக்கின துவிதியானவுடலியல் புவிதித்தநன்னீராடலும் (யாம்)
வேள்வியொடு தவஞ் செயல்வலம் வருதலாலயம் வெற்றிபெறு மனச்செய்கை
மாபுவியிலுபகாரமாகவேவந்திடுமகத்துக் குள்குணமிதென்பார்
ஆண்டுபதினாயிரந்தேடி னுங்காணாதவைய்யனையறிந்து கொள்வாய்
அகத்தினிடைய கலாமல்நிறுத்திவையனு தினமரத்துறைப்பதிநாதனே. (கங)

## மாந்தர்க்கு 10 புத்திரரனி.

பாருலவுமாந்தர்க்குப்பாலனோபத்தென்பர் பகருவேனதையறியவே
பண்பானவவுரசன் க்ஷேத்திரஜன் கானீயன்பகருகூடோத் பன்னனாம்
சீருலவு தேவரன்னபிமானன் தத்தனாஞ்சேருகிரீடோத் பன்னனாஞ்
செப்பினோந்துஹித்திரன்செய்மகப்புத் திரன்சேருமீரைந்து சுதனாம்

## திருவரத்துறைநாதசதகம்

கூருலவுபுவியின் மேல்கருமஞ்செய்யுரியாரகள் கானு முன்னகத்திலேதான்
கலியுகமதில் தத்தன் அவுரசன் துஹித்திரன்கானுகூ டோத்பன்னானாம்
ஆருலவுசென்னியுளவய்யனைத் துதித்திட அறிந்து கொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல் நிறுத்திவையனு தினமரத்துறைப்பதிநாதனே (கச)

## இதுவுமது

கச்சையணிமாதை மணஞ்செய்த திற்கருவரிற்கானுமவுரசபுத்திரன்
கருதுநற்பாரியைபிறர்கலந்து தித்திடில் கழறுக்ஷேத்திரராஜபுத்திரனாம் (ம்
இச்சையாலொரு பெண்ணைக்கூடியுண்டானவனிணங்குகிரீடோத் பன்னனா
எழில்மனைவி தன்மனந்தெரியாமலுற்பத்தியே றுகூடோத்பன்னனா
எழில்மனைவி தன்மனந்தெரியாமலுற்பத்தியேறுகூடோத்பன்னனாம்
பக்ஷமுடனேகன்னிகழியாதவவளோடுகலந்தசுதன்கானீயனாம்
பார்புவியில் மனைவியிடந்தேவர் முனிக்காஞ்சுதன் பகருதே வரபுத்திரன்
அச்சமில்சிவனடியை அன்புவைத்தனு தினமர்ச்சிப் பையவனிமீதில்
அகத்தினிடைய கலாமல்நிறுத்திவையனு தினமரத்துறைப்பதிநாதனே. (கரு

## இதுவுமது

தண்ணுதமரோரிடம் தாக்ஷண்யமதுவேணுந் தங்குபரிஜனமீ தினில்
தயைவைத்தல்கவிஞர்பால் தானீ தலப்புறந்தக்கர்பாற்றானே சமாம்
நண்ணுபுவியரசர்பால்நயமுரைத்திட வேணும்நாரிபாலெப்போதுமே
நன்மையுரையாகாதுநானிலத்துட்டர்பானாடுதெண்டனைநீதியாம்
உண்ணினுஞ்சத்துருபாற்சவுரிய முரைத்திடுகவோ துமுபதேசியுயர்வோ
டுத்தவர்களின் மீதுபெருமையேவைத் திடுதலுககத்தில் முறையாகுமாம் (ல்
அண்ணலைப்பொருளென் றுயாருமேயுரைத்திடுவர் அறிந்துகொள்ளவனிமீதி
அகத்தினிடையகலாமல் நிறுத்திவையனு தினமரத்துறைப்பதிநாதனே (கசு)

## புருஷர்களுக்கழகானது

அரசருக்கம்புவியில் ஞாயமேயழகதாமரிவையரக்கழகுநாணம்
அனைத்தையுமறிந்தவர்களா குடும்மலத்தையாத்திட்டிருப்பதழகாம்
சரசமதுமிகவழகுசாதுரியகணிகைக்குசாத்திரேனாஞ்சுகவிலையாம்
சாருமறையோர்க்கழகுசகஜமாமறை யோதல் சரசுமிகலூர்க்கழகுதான்
பெரியநிதிபடைத்தவர்கள் பேருதவி செயினழகுபெரி தானவாசிக்குமே
பெரிதானநடையழகுதெரியாமல் பிழைசெயில் பெரியோர்கள் தீர்ப்பதழகாம்
யரைச்சணத்திடைவிடதரவமணி யையனுக்கன் புசெய்யவனிமீதில்
அகத்தினிடையகலாமல் நிறுத்திவையனு தினமரத்துறைப்பதிநாதனே.(கஎ)

## மாதரிகளின் ரகசியம் நில்லாமை

மணிகொண்டமாலையணிபாண்டுபூபதிமனைமாதரசிகுந்தியென்பாள் (னாள்
மகவடையும்விஞ்சை பொருளாறையுங்கற்றுலகின்மைந்தனைக்கொண்டாடி

கணியண்டியிசைபெற்றகர்ணமகாராஜனைக்களத்திடைச்சரித் தவகையால்
காரிகைகருத்து வெளிப்பட்டிடாதிருந்ததாற்கனபழிக்காளாகினோம்
திணிமுரசுகொடிதருமன்றீராதகோபனாய்தேர்வி ஜயன்முகநோக்கியே
தெரிவையர்களின் றுமுதலேதேனுமிரகசியந்தெரிந்திடில்பிறரியவே
அணியணியறைந்திடச்சபித்தனனுதிட்டிரன் அன்றுமுதலுளமடக்கார்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத் துறைப்பதிநாதனே. (கஅ

## அஞ்சலிவிபரம்

கவ்வுநீர்காசினியில்காணுமறையோரன் றிகழுறுமுச்சாதியானோர் (ட்டால்
கல்வியாற்கேழ்மையாற்பெருநிலப் பெருக்கினாற்கண்டொருவன் தெண்டனி
செவ்வையாயவருக்குபதில்தெண்டமிட்டிடுதல்சிறப்பதாமி துவன்றியே
ஜெகமெச்ச ஆசிகொலில்சேர்ஜென்மநீசனாய் ஜென்மித்துஜெனங்களுக்கு
ஒவ்வொருவரதமக்குமேதடியோடும்பிட்டுவோதுகைப்புதிற்றண்டும்
ஒராமலேயுலகிலெல்லாரக்குமடிமையாமோயாததொழில டைகுவான்
அவ்விதியினிப்படியஞ்சலிப்பலனெனவறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (கசு

## போதாயன அமாவாசி

செப்பிடுஞ்சதுர்த்தசிசேருவாரந்தனில்செல்லுநால்யாமத்தினில்
சேர்ந்துவரிலமாவாசிசிறி துற்றபோதிலுஞ்செப்பிடுவர்போதாயனம்
இப்புவியிலமாவாசைபிரதமைகூடிடிலினியபிரதோட காலம்
எழிலாயமைந்துபின்திதியேகுறைந்துவரிலிசைத்திடுவர்போதாயனம்
தப்பிலாசத்துர்தசிதான்வருத்தியமாவாசைதானதில்குறைந்துவரினுந்
தக்கதொருபிரதமைதுதிகைதானீனமாய்தான்பிறையுதிக்கலறைவார்
அப்புபணிமதிசூடுமண்ணலைநன்னாகவறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே (உ0)

## யுகப்பிரமாணமாவது

கடையின்முன்வருகின்றகருதாதியு கமதில்காண்வயதுகோடிலெக்கம்
காணுநீபிரண்டதாம்யுகமதனிலாயுளுங்கருதினார்லெக்ஷமென்றே
புடையில்வருதுவாபரம்புகலுவாராயிரம்பொருந்துகலியுகமதனிலே
பிழையன்றிச்சதவருடம் பூணுவாரதிநீர்க்கம்போனபின்மத்திபந்தா
னடையதாமறுபதினாறுள்ளவயததாமிதற்குமேலற்பவயசு
எழிலாருமுப்பத்துமூன்றென்றுரைப்பரேயிதுதீர்க்கமத்தியாற்பமாம்
அடைவுடன்னதையதையுமுன்மூன்றதாய்ப்பிரித்தறிந்துகொள்ளவனிமீதே
யகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (உக)

## சிராரித்தத்ருக்காகாதபுஷ்பம்

திதியதனில்மல்லிகைத்தாழையோடலரியுந்தீண்டொணாமுல்லைமருந்
தேகத்திலப்பியங்கனந்தீபமில்லாமல்திகழோமமில்லாமலும்
துதிசெயுந்தக்ஷணையேன்றதில்லாமலுந்தொல்காகபலிபிண்டமும்
தொகுத்ததனைவிட்டிடினுக்தூயதிலந்தள்ளினுந்தொல்பிதாசபித்தேகுவான்
சதிசெயுந்தந்தைதாயென்னினுமவரவரவர்க்கானபடிசெய்யவேணும்
சகமதனிலவர்களைச்சதநிதம்போற்றினோர்சகலபலனடைவர்கண்டாய்
அதிபருவம்வருமுனேசசிதனையணிந்திடுலமமலனைப்போற்றிவாழ்நீ
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே (உஉ

## இதுவுமது

என்றெனினுமாகா துகுருடூமைசெவிபீனனவயவங்குறைவாயினோன்
இசைக்கின்றகனரோகமுற்றவரிப்புவியினெழிற்பிரமசாரியானோர்
நன்றிலாவபத்நீகனற்கருமம்விட்டவனவிலுசந்நியாசியோ கி
நாடதனிலாசௌசமுற்றவனற்குருநாடிடார்த்திக்குரியராய்
அன்றிபின்றன்சாதியதில்வராதவனையுமானகுலந்தலைமூன்றுறும்
மவரின்வழியறியாதவதிசுத்தனென்னினும்யாருமேசேர்க்கொணாது
அன்றிவருவோர்குறையகற்றிவீடளித்திடுமய்யனையறிந்து கொள்வாய்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனு தினமரத்துறைப்பதிநாதனே (உ௩)

## எப்போதும் சுசியுள்ளவைகள்

ஈமசகம்பூமியுமினியதோர்பாலனுமெழிலுதவு வேசிமாரும்
ஏரானவழலுடன்மான திபுஷ்பமுமேங்கிடாப்பசுவுமறையோர் (ஞ்
சியெனச்சொல்லொணாசேர்ந்தவகையோர்க்கெலாஞ்சேர்ந்திடாதயல்சூதக
செப்பினுந்தேனுபால்ரோசனைசவரமுஞ்சேர்முத்துசெந்தாமரை
தீயிகழும்பொன்புனுகுதானியம்பட்டுடன் தேறுநற்சவ்வாதுதான்
தேயமதில்பிறந்தவிடமீனமாயிருக்கினுந்திரள்சுத்தவஸ்துவென்பார்
ஆசரபமாகிநரசிங்கனைவீழ்த்தவாவய்யனேயெனையாளுவாய்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (உச)

## புருடர்க்குத் தீக்குணம் 10

இந்தவுலகத்திலுளமனிதர்க்குத்தீக்குணமிழிவுளதுபத்துவென்பா (ன்
ரேதெனிற்பொய்யுரைகோட்சொலல்கோபித்தலெழில் பயனிலாதசொற்க
வந்திடிவிதனையேவாக்குதீக்குணமென்பர்வகையிலாக்களவாடலோர்
வறிதேதொழிற்செயல்கொலைசெயல்சூதாடல்வளர்காயதீக்குணந்தான்
நிந்தையுளகொலைசெயநினைத்திடுதலோர்காமநீட்டித்தேயாசைபெறுதல்
நிலையிலாதொருசித்தநெடுமனக்குற்றமாம்நீணிலத்தவர்காணவே
அந்தமுடனவனிதனிலமர்ந்தேயிருந்திடுமகிலபரிபூரணனையே
அகத்தினிடைகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே (உரு)

## விட்டுவிடவேண்டியவர்கள்

தக்கதொருசமயத்திலுதவாதசுற்றமுந்தனக்கு வேண்டியவரத்தைத்
தருவதற்கிசையா ததெய்வமுந்தாவுபரிதானேறிஎடவாததும்
மிக்கசுகலிலைக்கு மேவாதமங்கையுமேலானகல்வியதனை
மேதினியலறியாதமானுடர்கள் நேசமுமிகுத்தல் ளாகிலுந்தான்
றொக்குதவியில்லாமலூழியஞ்செய்திடுதலுயர்ந்தநற்சமயத்திலு
முதவாதவிவர்களைபொழித்திடுதலலமென்னவோதுமேநன்மறைகளே
அக்கரமைந்துளவைபனைக்கண்டுநன்கறிந்துகொள்வனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே (உசு)

## நித்தியதேரிசனக்கிரமம்

காசினியில்மானிடர்கள்கங்குறுயிலெழும்பொழதுகாணுநன்குறியானவை
கபிலையொடுதர்ப்பணங்கதிர்தனமுள்ளவன்காத்திடுமரசர்தன்னை
விசுமறைபோதுகுருவேண்டிடும்பதிவி தைவிட்டிடாதன்னமிடுவோன்
வேண்டில்ருணமீபவன்விநாயகனாதியாவிளங்குகுலதெய்வமதனைக்
கூசல்விட்டனுதினங்குறித்தோரைக்காண்பதுகுணமாகுமிப்புவியினில்
குவலயந்தனில்வாழ்க்கைசெய்யுமானிடருக்குவுற்றவிதியெனச்சொல்லினார்
ஆசுமுதல்வில்தாரமானகவியோர்புகழுமண்ணலையறிந்துகொள்வாய்
அகத்தினிடையகலாமல்நிறத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (உஎ)

## அந்தணர் ஆசியால்வருங் குற்றம்

முந்தமறையோர்களின்முகமிவன்நோக்கிடில்முன்றண்டஞ்செய்யவேணும்
மோசமாயிருக்கவவன்மறையாசிசொல்லிடில்முன்சொல்லுசூத்திரன்றான்
நொந்துநரகெய்திடுவனூல்வலான்பின் னாவன்னோகமரியாதைவிட்ட
நோம்பிடுந்தவமற்றுநொடியினில்லானையாயுதித்தனனிந்திரத்துய்மன்
வந்தவனை ரக்ஷித்தவராகன்முதலோர்தொழவருநாரிபாகனான
வருகங்கைமதியரவமத்தையணியையனைவையகந்தன்னிலேநீ
அந்தமுடனடிதொழுதருள்தனைப்போற்றிடவறிந்துகொள் ரவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே (உஅ)

## குணமேலிடித் குற்றங் குறைதல்

ஓதுமதிதனக்கதிகுட்டமுண்டானதுமோங்கிமயமலையானதை
பொழுகுபனிமூடியதுமுவரியுப்பானதுமுயர்வறுமைகவியோர்க்குமே
தீதுபெறவுற்றதும்ஸ்திரீதனந்தொங்கலுந்திகழ்குமரிகிழமானதும்
தெரிமணச்சந்தனத்தருவைபாம்புற்றதுந்தேமறைத்தாள்கள்முள்ளும்
யாதுவந்துற்றதையனுதினம்யோசிநீயவரவரக்குற்றபடியே
யமைந்திடினுமவரவர்கீர்த்திதான் போகுமோயாதுவந்துற்றபோதும்
ஆதியாம்பரமனையனுதினந்துதிசெயஅறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (உகூ

## விரத பங்கமில்லாதவுண்

காணுமேயப்புபால்கனிகிழங்கவைகளுங்கருதுநெய்யவிசானதுங்
காதலுறுமாவுடன் காணமறையோர்திக்கட்டளைக்காகவரைதல் (ன்
தோணுமேயிதுவெலாந்தோஷமேயிலையெனத்தொகுத்திடுந்தருமநூல்தா
றொல்புவியில்களரோகந்தோன்றிடுங்காலமுந்தொல்லரசர்கடுங்காவலைப்
பூணவேதவறினும் விட்டிடினுமதற்காகப்பொருந்திடாதோடமென்பார்
போதநூற்படிக்கதையப்புறமெடுக்கலாம்பூநன்மையாகுமேதான்
ஆணவம்நீக்கியேபரமனைத்துதிசெயவறிந்துகொள்வனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (௯0

## மரியாதையில்லாவிடநீக்க

எழிலானமரியாதையிசைசுத்தநேசமுமிகுத்தநன்கவியோர்களும்
எப்போதுமோடுநீரின்சுவைநதிகளுமேற்குமவரக்கீதாதையும்
இழிவானரோகத்தையெடுத்திடும்வைத்தியனியம்புநற்காலமதனை
இன்னதாமென்றுமேயிசைக்கின்றசோதிடனியல்பானதருமநிதி (னும்
யொழிவானவிடமதனிலொருநாழிநிற்கொணா தொழிந்திட்டவேளையெனி
உற்றபெரியோர்பரமனடியாரைப்போற்றிடவுவரிசூழ்புவியின்மீதில்
அழிவிலாச்சிவனடியைஅன்போடுதுதிசெயவறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே (௯௧

## அறியாமை

விரிவுலகில் தன்மங்கைவெகுவடிவமென்னினும்விரும்புவன்வேறொருவரை
விழைசுதன்வெகுவித்தைகற்றாலுமவனையேவேண்டிடார்வியன்பூமியில்
பெரிதுதருமூலிகைகொல்லையிலிருக்கினும்பெரிதென்னவதனைநாடார்
பெறுபாலரிழிவானகாரியஞ்செய்யினும்பேசிடார்பெருமையென்பார்(னோர்
தெரியவுரைசெய்பெரியர்வார்த்தையைத்தீதென்பர்தெளிந்திடாமூடரா
தேசத்திலிருக்கின்றபெரியோரைநிந்தித்துநீரகுதானடைகுவார்
அரிபணியுமய்யனைஅனுதினம்போற்றிடஅறிந்துவாழவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (௯௨

## மூடர்கள் தொட்டதைமவிடாரென்பது

எப்போதுமிசைபெற்றவிராவணன்காணவேயிலங்கையிற்றீயிட்டதும்
எறிகடலின்மீமுதலைகற்றெப்பமானதுமிழைத்ததிக்கானைகொம்பு
கொப்பாகநழுவினதுங்குரங்குவந்துற்றதுங்கூறுசஞ்சீவிமுதலாக்
குணமாக்கிடைத்துதுங்கூடுவிட்டிறந்தபின்குரங்கவைகளுண்டாதலும்
பப்பாகமுதனாளிற்பகைவனாலிளைத்ததும்பார்த்துமேயிராவணன்றான்
யார்மீ திலேசண்டைசெய்தேயிறந்தனன்பார்புவியிலிதையறிகுவாய்
அப்பாருளோர்காணகுடை சிவிகையீந்திடுமய்யனையறிந்து கொள்வாய்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே (௯௩

## சந்திரன்பெருமை

சசிதனக்குரியதாம்பாலுசாகரமதிற்சசியுடன்பிறந்தோர்களோ
சகலருந்துதிக்கின்றயிலக்குமியிந்திராணிசாற்றிடில்கௌஸ்துவந்தான்
ரசிதவுடலோனென்றுமரன்சிரமிருந்திடுவனருவிபோற்றண்மையானோ
னம்புவியிலேசரவசராதிகட்கெலாமானந்தமயமாயினோன்
விசிதமுட்டாமரைவெண்டிங்களைக்கண்டுவெள்கியேகுவிந்திடுவது (றோ
வெண்பிறையின்றோட மெனவிளம்புதற்கென்ஞாயம்விரிமலர்ச்செய்கையன்
அசிதனெனுமென்றனையருளினாற்காத்திடுமய்யனையறிந்துகொள்வாய்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே (௬ச

## சேரிடமறிந்துசேர்தல்

பபயர்மீதிலுதித்திடும்பலவகைப்பறவையும்பகருவனமதைச்சேருமே (ச்
பணிமெத்ததரளநகையெளவனப்பெண்களும்பார்த்தடைவர்புருடர்தன்னை
சீர்மேவுநதிகளும்செழுங்கடல்தனிற்புகுஞ்செப்பிடும்பமரங்களோ
செவ்வையாய்மலர்களின்தேனினிதைநாடிடுஞ்செழும்புனற்பள்ளமேகும்
கார்மேகமென்னவீமனிதனைச்சேருமேகாசினியினற்கீர்த்திதான்
நயகுணசர்த்தியசத்தியதிடசித்தனைநாடியேநிற்பளெக்ஷ¬மி
ஆர்பரவுசிரமுள்ளவப்பனைத்துதிசெய்யஅறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே (௬ரு)

## காரியசித்தியாற்பகைவருதல்

பேருலகில்நாரிக்குப்பிள்ளைகைகொத்தபின்பெறுபுருஷன்பகைவனாவன்
பெருவித்தைதந்தபின்றேசிகன்பகைவனாம்பேசுநோய்தீர்ந்திட்டபின் (ன்
சீருலகில்வைத்தியன்பகைவனாய்ச்சேரந்திடுவன்செய்தாரங்கைக்கொத்தபி
சிறுமைபடப்பெற்றேவளர்த்ததாய்பகைவளாஞ்செப்பினோமுலகிலென்பார்
வாருலவுமார்புதான்தளர்ந்தன்பதானபின்வருநாரிபதிவிரதையாம்
வளமானகாரியமொன்றையுமுடிக்கலான் வருபுவியில்சாதுவென்பார்
ஆருலவுமதிபுனையுமண்ணலைத்துதிசெயவறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனு தினமரத்துறைப்பதிநாதனே. (௬௬

## சதாசூனியமுள்ளவை

கருத்திலாமூடருக்கா னதையுரைக்கினுங்கருதிடரருளஞ்சூனியம்
கருதுநிசிமந்திரம்பிளக் கொழிந்திருந்திடினுங்காணவதுகிரகசூன்யம்
பெருத்திடுந்தரித்திரமுற்றபேர்தனக்கெலாம்பேசிடும்பொருள்சூனியம்
பேசிடும்பெரும்பாலரில்லாதமனையதேபெருமனைச்சூனியமென்பார்
உரித்தானதெய்வநற்பூசையில்லாதலுனுண்டிடுதலுயர்சூனியம்
வோர்வாவியாறிலாவூருதான் சூனியமுதவிலான்வாழ்வுசூனியம்
அரித்திடுவர்தீவினைப்பிணியைநீயப்பனே அவனிமீதறிந்துகொள்ளே
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (௬எ

## நித்தியயாகம்

பிரதிதினமம்மியிற்பலபண்டமரைப்பதாற்பேசுநீரனலிடுவதாற்
பெருகிடும்பலகறிகளானவையறுப்பதாற்பிசகிலாதவிப்பதாலும்
அரியபுவிமீதினிலழகிலாமலசலமகற்றலால்வழிபோவதால்
அறியாமையுமிழ்தலாலாகின்றபாவங்களடையாமல்கழிந்துவிடவே
தெரிதினம்மறையோதலௌபாசனஞ்செயல்தேரநீபலியிடுதலும்
தேவதாபூசையோடதிதியாராதனந்தெரிந்தமட்டவரவர்க்குக்
கருதிசெய்திடிலுனைக்கண்ணுதல்காத்திடுவர்கைலையான்றனைக்கருதியே.
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே (௩அ

## சேவகைகள்

உவரிசூழ்புவிமீதிலுளவாதிசைவருமுணருவைகானிசன்றான்
உறுதிகொள்பஞ்சராத்ரீகவைணவனாகவுற்றநல்லிவர்மூவரும்
கவுரியோர்பாதிபனகாளிங்கநிர்த்தனன்கருதிவாழ்கோயில்பூஜை
காசினியில்செயற்குரியர்காசினுக்குலோபியாய்கருதியேவேறொருவரை
விவரமறியாமலேவைத்திடின்வேதவிதிவிலக்கிடுந்தேவலகனா
வேண்டிவருகாரியாகாரியங்களுக்குவரைவிவக்கிடுவருலகர்தாமே
அவரினமறிந்துசெய்யாலயந்தன்னிலேயாத்மரெக்ஷகனைநீயே
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (௩௯

## இதுவுமது

வையகந்தனிற்பூஜைவழங்கிடும்விக்கிரகம்வருசாளிக்கிராமமோடு
வாழ்வேதவித்தைமுதல்வளர்விஞ்சைநூல்களும்வாங்கிடுந்தானபண்டம்
மெய்யுடனிதைக்கிரயம்பூசுரன்செய்திடின்மேவுதேவலகனென்பார்
மேதினியிலொருகருமகாரியந்தனக்காகார்மெய்யுடன்விலக்கவேண்டும்
பொய்யன்றிவித்தையைப்போதியென்றவர்க்குமேபுகலாதிருக்குமவனும்
புவிமீதிலேமலைப்பாம்பாய்ப்பிறப்பனென்றுரைக்குமேபுனிதநூல்க
ளைய்யெனுமம்கரப்பொருளினான்றன்னையேஅறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதினாதனே. (௪0

## ஒருகுணத்தினாலனேகந்துர்க்குணம்நீங்கல்

நாடின்றிக்காடுறையுநன்னாகம்வசித்திடுநற்சோலைவளமுள்ளதாய்
நல்லகாய்கனியின்றிநாடிடப்பயங்கரநனிமிக்தருதாழைதான்
காடண்டிவாழ்கினும்கருதுமலர்கந்தமாங்காணுமனிதரக்குநேசம்
கண்டுகொள்கரும்பழகுகனருசிவாய்க்குதவுங்கருதுசர்க்கரைக்கானதாம்
தாடண்டுபூவதில்தரித்தேமுளைத்திடிறாணியிலொருவர்திண்டார்
தாராளமாயதனையோசிநீதரணியில்தங்கிடுமிசையுனக்கு
ஆடுண்டுதில்லைவனத்தேசத்திருந்தவனைஅறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவைஅனுதினமரத்துறைப்பதிநாதனே (௪௧

## திருவரத்துறைநாதசதகம்

### அவசியமிஎண்ணையிடுநாட்களி

செய்யினும்புவிமீதிலெண்ணைதேய்த்திடுவதற்கெழிலிலாநாளாகினுஞ்
செய்வதற்குரிதாகுஞ்செய்மணமுதற்றினஞ்சேர்ந்துவருதீபாவளி
தையெனுமதிக்குமுன்வருபோகிபண்டிகைதங்குசூதகந்தீரினுந்
தப்பாமனவராத்திரிபண்டிகைதன்னிலுந்தாலன்வெள்ளிபகலின்மேலும்
மையேறுமாதர்விழிமங்கையேயுகமாதிபண்டிகைப்பகர்நாளெலாம்
மனதொவ்வாத்திதிவாரமனக்கிலேசமாயினும்மாபுவியில்நீக்கொணாது
அய்யனேயித்தலத்தைந்துமொன்றானவனைஅறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (௪

### உடற்குற்றம்

தொடருவினையாலுடறோன்றிடும்புவிமீதுதுயர்தருமதின்குற்றமோ
நூயபசிதாகமொடுபயம்வெகுளியுவகையுந்தொடருதன்விருப்பமெல்லாம்
படருநன்னினைவுநோய்மரணமதிசயமோடுபாரிலூணுறக்கமென்பார்
பாழ்பிறவிமதமின்பம்வியர்தலைபரவுடன்பாரத்துவமாதியான
விடருதொகைபதினெட்டுமிச்சைபடிசெய்பவரிவர்களைவிட்டாதிக்கி
இயல்மனதைத்தன்வசஞ்செய்துமேவாழ்பவரீசனுக்கடிமையாவார்
அடருவினைபத்தனையுமகற்றியேயாண்டிடுமய்யனையவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே (௪௩

### க்ஷவரவிதி

செப்பிலாமானிடர்க்காகாதநாளெனினுஞ்செய்க்ஷவுரவிதிமுக்கியம்
செவ்வையாயறியதைதிக்ஷயின்காலமுஞ்செய்யுநீயிமவிதிபி
லொப்பிலாப்புண்ணியத்தலத்துற்றநாளினுமோதுவலியாணமதிலும்
முடம்புற்றரோகமதுதீர்ந்தநாள்தனினுமுபர்விலங்கரசர்காவல்
தப்பெலாமொழியவிடுநாளினுமாசௌசந்தானதுநீங்குநாளுந்
தரணியில்மாந்தர்க்குநாள்பார்க்கொணாதென்றுநவிலுதேயாகமந்தான்
அப்புலாங்கூமீதின்மூவர்வந்தடிதொழுமண்ணலையறிந்துகொள்ளே
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (௪௪

### பிதிரார்சிதஸ்தலம்விடுங்காரணம்

ஏர்கொண்டவுலகுதனிலெவ்விடத்தாயினுமெழில்சுகங்காணலுற்றால்
எப்போதுமதைவிடாதிருப்பதேவெகுநலமினியபிதிர்வாழ்த்தவிடமே (மபா
நேர்கொண்டதெனவெணாததில்வாழ்தனீத்துவிடுநேர்த்தியிதுவெக்ஷநன்மை
நேரிதற்குவமையேகருதிமுன்னோர்களாலமைத்திட்டகூபமெனினும்
பார்கொண்டநீரதிலுவராயிருந்திடிற்பகர்விடாய்தணிக்குமோசொல்
பார்த்துநீசெய்திடுவைபழஞ்சோறுமீந்தவிடம்பகருவார்காணியென்றே
பார்கொண்டவய்யனையனுதினம்போற்றிடஅறிந்து கொள்வனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (௪௫

## ஒருவரிபோல் மற்றொருவரிருக்கினுஞ் சமனாகாரி.

புவியதனிலுள்ளவுழைவகைகளையுதிர்த்திடும்பொருந்திடுஞ்சிங்கதந்தம்
புகழானவாள்முள்ளுபோனகமுற்றிடும்போய்வாழும்பிலமரசனோர்
திவியிராவென்னினுந்தீயசுரஞ்சென்றிடுந்தெருநாய்சிங்கமாமோ
தேசத்திலுள்ளவொருபெரியோர்கள்மகிமைதனைதெளிவிலாதவரறிவரோ
சிவிகையொடுசின்னமுஞ்சீர்காழிசம்பந்தன்சிறப்புடன் பெற்றதறிவாய்
செகமெலாந்துதிசெயுந்திருவரத்துறைதலந்தெரிந்துகொள்ளவனிமீதில்
அவியேறுவாஹனன்னனுதினம்வணங்கிடுமப்பனையறிந்துகொள்வாய்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே.

## திலோதகவிதி

தன்பிதாவிறந்திடிற்றகனஞ்செய்தப்புறந்தான்செய்கநக்கினந்தா
னத்தினஞ்சிலைநட்டுதன்கரத்தெள்ளுநீர்தானீதல்மூன்றுதரமாம்
பின்புதினமானதற்கொண்றொன் றுஜாஸ்தியாம்பெருதுசநீரானதோர்
பிரதிதினமூன்றதாம்பேசுமிருத்தியோதகம்பிசகாமல்மும்மூன்றதாம்
வன்பிண்டமொன்றோன்றுநாளினுக்காகுமேவாழுநவசிரார்த்ததிதியோ
வருநாளிலொன்றைவிட்டுற்றநாளுதவுதல்வாழ்மரபின்வருஞாதியோர்
அன்புகொண்டிப்படிஅனுசரித்திடவேணுமவரவர்க்குற்றபோது
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (சஎ

## இதுவுமது

இப்புவியினிருபத்தினாலதாமரசருக்கியல்வணிகர்க்கொன்றதிகமாம்
இனியதாமந்தணர்க்கெழுபத்தினைந்ததாமேற்றமாஞ்சூத்திரற்கோ
தப்பில்லைதொண்ணுறுதானெள்ளுநீரதாந்தானடைபிஞ்சூதகந்தான்
றருபத்துபனிரெண்டுதருபக்கநான்கதாந்தரணியில்மாசகாலஞ்
செப்பினோமுதல்மரபுசேர்வரிசையாகவேசெய்யதிரிசாதியார்க்கும்
செய்கைபதினைந்துநாள்சென்றபின்சூத்திரம் செய்வதற்காகுமுறையே
அப்புதலைமதிசூடும்அரவினைப்பூண்டோனைஅறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே (சஅ

## மூடரிக்கு அறிவின்மை.

பிறவிவிழிகுருடாகியுதித்தவர்களறிவரோபெரியமாணிக்கமகிமை
பேசுபெண்சுகமதனைப்பேடிதானறிவனோபெரும்புவியில்கன்னியோர்கள்
திறமதாகக்கலவியின்பத்தையறிவளோதேர்ந்துவருமன்னநடையை
தெரியாதகாகமதுகற்றேநடக்குமோதேறுநீமகப்பெறுதலை
பிறவாதவந்தியர்கள்பெற்றவர்போலறிவளோபெறுகழுதைரகசியத்தைப்
பேசுதற்கறியுமோபெரிதானதரித்திரம்பெற்றபேர்சுகமறிவரோ
அறிவுள்ளஞானியையசடர்தானறிவரோவவிசாரிகற்பறிவளோ
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே (சக

## வியாகுலம்பெரிதென்பது

வாரிசூழ்புவிமீதுமனைவியிரண்டுண்டுவழங்குவார்விஷ்ணுவுக்கு
வாரணியிமிலக்குமிவதிந்திடாளோரிடமசைவிலாதிருப்பள்பூமி (னே
யோருமகனிரண்டென்பரோர்ஞானியாமொருவனுயர்சடலமிலையொருவ
யுயரமளிசேடனாமிறைகடல்வீடதாமுருவான்பருந்தேறியே
பாரிலிதையறிந்தவன்றன்மனம்புண்ணாகப்பார்க்கமரமாகிவிட்டான்
பார்க்கின்றபேர்களுங்காணலாஞ்செகந்நாதபழமையாந்தலமதனிலே
யாரெனினுந்தியவினை அகற்றிடுமையனையறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (ரு0

## தோஷமில்லாரிகளில்லையென்பது

அயிராவதற்காட்டினண்டம்வந்துற்றதுமம்புலிக்கானகுறையும்
ஆதிநாராயணனாயனாய்ப்போனதுமப்புநீருவரானதுந்
தையெனுந்தாசிபால்வதிட்டன்வந்துற்றதுந்தரணியில்மிச்சகந்தி
தன்னிடமவியாசன்வந்துற்றதுந்தழலனைத்துண்பதுந்தரணிமீதே
பையரவமணிசம்புபாவையோடாடினதும்பகருபாண்டவரைவரும்
பார்மீதிலைவருக்குற்பத்தியான தும்பார்த்திடிற்றோஷமிலையா
லையெனும்புவிமீதிலாருளாரன்புடனறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமாத்துறைப்பதிநாதனே (ருக

## மணப்பெண்ணிலக்கணம்

தாய்தந்தையற்றபெண்துணைவரில்லாதவள்தக்கதுணைபெற்றிழந்தாள்
தருசுத்தம்புகழ்யோக்யஞ்செல்வமில்லாதவள்தகுநல்லகுடியில்பிறவாள்
தோய்பிணித்தந்தைதாயற்றுளார்க்குதித்தவளுயர்பரமனாமமில்லாள்
தொடர்ச்சியாயபமிருத்யுவாதையாலொழிந்தவனுரியபெயர்தானுற்றவள்
பேய்நாமமிட்டவள்பெருசமயதேசிகன்பெற்றிட்டபெண்ணானவள்
பேசாதஊமையொடுகூன்குருடுகுறைவுடல்பெருதேகம்வடுவுடையளே
யாயிழைக்குற்றமென்றம்புவியிலறைகுவாரானமிருகண்டுவுரையே
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (ருஉ

## இதுவுமது

எப்போதும்பிறர்மனையிலிச்சையாய்ச்செல்பவளெழில்கணிகைவிழிபூணுவா
எமாறமிரட்டுபவளேரேறுமிளஞரைபெப்போதுமனத்துன்னுவாள் (ள்
செப்பாமல்வீதிவாய்சேர்ந்தேயிருப்பவள்சிறப்பாகவாடைபணிகள்
செவ்வையாயலங்காரஞ்செய்தெங்குமலைபவள்செல்புசிப்பதிகமுண்பாள்
கற்பாவைபோலுடல்மறந்தேயுறங்கிடுவள்கணவனுக்கதிகவயதும்
கருதிடாரேககோத்திரத்துற்றவள்கடைச்சாதியுயர்சாதியோர்
அப்பாலுமிலக்கணமியம்புவோமன்புடனறிந்துகொள்ளவனிமீதி
லகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (ருங

## இதுவுமது

குள்ளமாயிருப்பவள்பெரிதானதேகமுளள்கூறினோமெலிந்ததேகங்
கூசிடும்படிக்குள்ளகுறில்வடிவுகருமையாள்கொண்டதோர்சுவர்ணமேனி
உள்ளநற்றேமலு ம்பெலாமுற்றவளுயர்டசளைபூத்தவொளியாள்
உற்றிடும்நாணத்தைஒழித்தேயிருப்பவளோயா தபுணர்ச்சியுடையாள்
விள்ளுமோரதிசயங்காணாமல்பலுகாலும்வீணதாய்நகைசெய்பவள்
விள்ங்குமெல்லியகுரல்விட்டேயிருப்பவள்வீண்வார்த்தையாடித்திரிவாள்
அள்ளல்மரைமலரணியுமகிலாண்டமூர்த்தியையறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (ருச

## இதுவுமது

தந்தைதாய்கட்டளைமீறியேநடப்பவள்தன்கோபமேலிட்டவள்
தக்கமொழியன்றியேவீண்வாதுபேசுவாள்தப்பின்றிச்சண்டையிடுவாள்
விந்தையுளதோர்கூத்துவேடிக்கைவிரும்புவாள்விழைவுளாள்விரகமதிகம்
வேதாகமஞ்சொலும்விபுதரைவீணென்பள்விதிமுறைமுனிவோர்குழா
நிந்தையாயிகழ்பவள் நெடியபிறவுயிர்த்துயர்நேர்படிவிரங்காதவள்
நிலையுற்றகடினமொழிநீண்மரபொழுக்கமுநினைவின்றிப்போறாமையாள்
அந்தமுளதெனினுமதுவாகாதெனச்சொல்வரறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே (ருரு

## இதுவுமது

கற்புதனமென்பதைகாக்கவறியாதவள்கருதுபஞ்சேந்திரவழியாய்
கருத்துதான்செல்லாமற்றடுத்திட்டுதுணிவதாய்காயநிலையறிந்தபேரை
சொற்பமாய்ச்சீயென்னல்சிலையுளதோதெய்வமெனல்சொல்வயதுபத்ததிக
சொல்லுதற்கானவளார்த்தவஞ்சோபியாள்சொல்லினுமச்சமில்லாள் (மாய்.
நற்புவியில்மனிதருக்கினியகுணமில்லாளுநவிலசனிபோல்வார்த்தையும்
நல்லதாய்தந்தையர்களேற்பாடுசெய்முனநாடியேகணவனடைவாள்
அற்புதமெழிலுளாளாகினும்விட்டுவிடவறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (ருசு

## இதுவுமது

வடிவினுக்கவமைநமக்கிடேதுமில்லையெனல்வனப்பில்வீறுப்புசொல்வாள்
வருநாணமச்சமடம்பயிர்ப்பென்னுமிவைகளைவகையுடன்மதிற்கொள்ளா
மிடியர்பெண்கெருடபார்வையுற்றிட்டவளியல்பிலாள்விலங்குவிழியாள் (ள்
மேற்பூனைநேத்திரம்பெற்றவள்பார்லவதான்பலகாலுஞ்சுழளுமின்னுள் (ள்
கடிவேணிசெம்பட்டையுற்றவள்சுருட்டைமயிர்கருதுபால்நறைக்குழலினு
காரானவளகமதுபறட்டையாயுற்றவள்காணுமயிர்கடைகுழன்றுள்
அடிவணங்கியீயினுமாகாதெனச்சொல்வரறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (ருஎ)

## இதுவுமது

கருதரியவிழிசெருகல்கண்மூக்குநெடியவள்காணவேபெருங்குரலினுள்
கழறுசிறுகாதுளாளமையும்நீள்பல்லுளாள்கணவன்மேல்விழைவற்றவள்
மருவுமறுமுகமினுர் சுணங்கிலாமுலேயினுள்மாணுநற்போல்வயிற்றினுள்
மகிழ்சாயவிலக்கணம்விதிப்படிக்கமைவிலாள்மைசுணங்காகவுடையாள்
விரலுக்குறியோடுகலேபூமிபடிவிலாள்விழைவுளங்கைநகமுமே
விகிதமுடனேசேப்புவிளங்காதிருப்பவள்விழைகரமென்மையற்ருள்
அரிவரியவதுவையரையாருமேகொள்ளார்களறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (ருஅ

## அமுதநிலை

அம்புவியிலாடவற்கமுதநிலையிருப்பிடமமவாசிபாட்டியமுதலாய்
ஆனதொருவலதுகால்பெருவிரலிருந்துபின்னாந்துதிகைகணுக்காலதாம்
நம்புதிதிருதிலேநயமுழுங்காலதாம்நாடுதொடைதான்சவுத்தியாம்
நலமானவல்குலில்பஞ்சமிக்கமைந்திடும்நாபிதான்சஷ்டிதங்கும்
வம்பிலாச்சத்தமிவழங்குமார்மத்தியில்வளர்ந்திடுங்குசமஷ்டமி
வார்கொண்டபுஜநவமிவளர்தசமிகண்டமாம்வாழ்த்துமேகாதசியினில்
அம்பிகேள்கன்னமாம்துவாதசிக்கதரமுமாகும்விழிதிரயோதசி
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (ருசு

## இதுவுமது

வளர்சதுர்த்தசிநெற்றிவாழ்தலைப்பூரணைவழங்கிடுமமுதமென்பார்
வாழமிர்ததானத்தினெதிர்விஷத்தானமாம்வருகிருஷ்ணபக்கபிரதமை
கிளர்தலையின்நெற்றிவிழியாகுமரதரமாங்கேள்கன்னபுஜமுமாகுங்
கெடுவன்றிகுசமதில்லப்புறமார்மத்திகேட்டிடுநாபிகுல்நயம்
களிர்தொடைக்கப்புங்ஙகனமுழந்தாளதாம்கண்டுகொள்கணுக்கால்விரல்
காசினியிலெல்லாரும்காணலாமமுதநிலைகாரிகைபூத்தநாட்கொண்
டளிமலரளிக்கின்றஅங்கனார்க்கவ்வாறுமமைந்துவருமென்பர்சிலபே
ரகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (சு0

## சிற்பம் 32க்குப்பெயர்

சீரானவிச்சுவதருமமொடுவிசுவேசஞ்சிடிறந்தநல்விசுவசாரஞ்
சேருநல்விருத்தந்திராவிடநளமயஞ்செப்பனுமனூல்பானுவா
மேரானசிருஷ்டைமொடுகற்பமாரியத்துடனியலானமானசாரம்
இசைகின்றவஸ்துவித்யாபதிபாராசரியெழில்கிடகம்சயிந்தம்
பேரானவஸ்துவேபோதவிஸ்தாரம்புகழிந்திரவச்சிரசவுமம்
புனிதமுளவிசுவமாம்காசிபம்மகதந்திரம்புகழ்ச்சித்திரவிசாலரமென்பார்
ஆறானகங்கையணியய்யனைப்போற்றிடிலகத்திலுளபூர்த்திசெய்வ
றகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (சுக)

## இதுவுமது

இப்புவியில்காபிலாகாலயூகத்தொடுநாமசங்கிதைசாத்திக
மிசைவிசுவபோதமொடுஆதிசாரத்துடன்வெகுசுருதிமானபேதஞ்
செப்புமுப்பத்தினிரண்டதாஞ்சிற்பநூல்சேர்தொழிற்குபயோகமோ
செங்கலொடுகல்மரஞ்சேர்சுதைமண்லோஹஞ்சிறப்பானதந்தமெழுகு (ரன்
ஒப்புமிவையோர்வண்ணம்கண்டசர்க்கரையோடுதொழிற்குறுப்பீரைந்துத
தொல்லைமறைநூற்படியொன்றேனுமுணர்ந்தவனுலகத்தில்சிற்பியாவான்
அப்புவருமிப்புவியிலழகுமுத்துளசிவிகைஅன்பர்களித்தவரனை
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (சுஉ.

## கலியுகவியல்பு

அமவாசிவிரதத்தையழித்திடுவருலகத்திலாநித்தியகருமம்விடுவார்
அந்தணற்குரியயவுபாசனம்விட்டிடுவர்அரிதாகுநன்மாரிதான்
அமைகெந்தவாசமலரணிவதைவிட்டிடுவர்அம்புளிக்கொட்டையணிவார்
யாதேனுமீவதற்கறியாரறம்விடுவராகாதவழியிலாவார்
சமமற்றசாத்தானிசாதிவைணவனென்பன்சங்கமனையனென்பான்
சர்வபூவேதியர்கள்சதுர்மறைகளோதிடார்சமமிலார்சத்கவிகளே
அமைமதமூன்றேறுமானைதோலணிந்தவனையறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (சுங

## இதுவுமது

புருடர்தானுபகாரம்பூமியில்விட்டிடுவர்புரிவரபகாரபுகழை
பினதமாயீவோர்க்குப்போஜனம்கஷ்டமாம்பொருளுளான்னருளிலானாம்
கருடமாரணவிஞ்சைகருத்தினிலிச்சிப்பர்கற்பரேகட்சிவாதம் (பை
கழறுமெய்வார்த்தையைக்கனவிலுங்காணார்கள்கற்றிடுவர்பொய்வார்த்தை
புருஷருக்குளவித்தைபுந்தியிலெண்ணார்கள்புரியார்கள் திலதர்ப்பணம்
பொருள்கணிகைமாதரொருபுருஷனோடிருந்திடுவள்புகழ்மனைவிபலரையடைவாள்
அருட்கலியினுளபெருமையாராலுரைப்பதுவறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (சுச

## இதுவுமது.

காமாதிகலவியிற்கருத்தைச்செலுத்திடுவர்காக்கும்நன்முறைமைபாரா
கருதரியஜாதிமுறைவிதிதனைவிலக்குவார்கடைசியர்கலவிகாண்பார்
நாமாதிதேவதலம்நம்பியேகும்பிடரர்நன்மறைக்கீதம்நாடார்
நாடறியமரியாதையதனைவிட்டிடுவர்கணற்குணமதனைநாடார்
சீமோதிகாரியாயருக்கவேயிச்சிப்பர்செப்புவார்கோளினுரைகள்
செல்வேதசாஸ்திரஞ்சிறிதேனும்வேண்டிடார்செப்பிடுவர்துர்வார்த்தையே
ஆமாதுக்குடல்பாதிஅய்யனைத்துதிதினமுமறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினம்ரத்துறைப்பதிநாதனே. (சுரு

## இதுவுமது

சத்திபூசைகள்பூவில்சகலருஞ்செய்திடுவர்சாத்துவாராலயத்தை
சத்தியராமாயணஞ்சற்றேனுமனுகிடார்சக்கிலிப்பாட்டையறைவார்
பெத்ததாய்குருவண்ணன்பிதுர்முதற்றம்பிகள்பேச்சிலாப்பகைவராவாற்
பெருதாரம்வைப்பாட்டிபேசுமவள்சுத்தமும்பெருகுகுலதெய்வமென்பா
ருத்ததாய்தந்தை திதிகொடுப்பதற்கிசையார்களூரியவைப்பாட்டிதாய்க்
குலகமெச்சிடவுணவளிப்பார்கள்பின்னுமேயுயர்வரிசைதானமிடுவார்
அத்திதன்சர்மமணிஅய்யனையனுதினமறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (சுசு

## முப்புவகை

உலகத்தில்முப்புவெனவுரைத்தார்களுயர்முனிவருளவுதானறியாமலே
உவரிகடல்சூழ்புவியிலுள்ளமானிடர்களிலுணர்வென்பதேதுமில்லார்
கலகமிதில்லைநாங்காணலாங்கனகத்தைக்கனசுலபமென்றெண்ணியே
கருதுவாருஷரங்கல்லதின்கீழதாங்காணுமதிரவியென்பரே
விலகவிதியில்லைகடல்பாறையுப்பாமென்பர்விரும்பியேயலைவர்பின்னும்
விண்ணினிடிமேகசூல்விளையுப்புவென்றிடுவர்வேறுவழியில்லையென்பர்
அலகையொடுபாரிடம்படை கொண்டவய்யனையறிந்துகொள்ளவனிதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (சுஎ

## இதுவுமது

காணார்களப்பையுங்கருதார்களுப்பையுங்கண்டிடார்சுத்தகங்கை
காசினியிலாமூலபுளிதனைக்கற்றிடார்கற்கார்களாதிபந்தம்
சேணோடுபுகழ்முனிவர்செப்பினசூத்திரஞ்சிறிதேனுமிகவறிகிலார்
செய்ததொருநூல்பயன்சேர்குருவினாலறியார்செவ்வையாய்க்கற்றதென்றே
காணாதமலைகாடுகடல்வழிச்செடிகளுங்கடையினன்சரக்கையெல்லாங்
கடன்வாங்கிசெலவிட்டுகையினைத்தோய்வரேகருத்தேதுமில்லார்களே
ஆனானவத்தையுமகற்றிநீபோற்றிடவறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (சுஅ

## இதுவுமது

அமரியாம்பேரென்பர்அப்புறநீரென்பரானஜெயநீரென்பரே
அல்லாமல்சாகரநீருவர்நீரெனும்பெயர்சுத்தகங்கையென்பார்
குமரியின்விந்தென்பர்நாதமென்றறைகுவார்குறித்தமுகில்சூலென்பரே
கூசாமலாகாசநீரெனச்சொல்லுவார்குடிதண்ணீருமினியென்பார்
திமிரிகெடவானதைகுருவாலறிந்துமேதேர்சித்தனூலினாலும்
திரைமறைவிட்டொருவன்றேகத்தில்நின்றுவருஞ்சிறுநீரெனத்தெரிகுவா
அமராடிதொழுதுவருமய்யனைப்போற்றிடவறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (சுகூ

## திருவரத்துறைநாதசதகம்

### இதுவுமது

பார்த்திடும்ரோமரிஷிகும்பமுனிபூரணம்பகர்ஞானவெட்டியெல்லாம்
பார்த்தாலுமேயிந்தபக்குவமில்லாமல்பகர்ந்திடார்வேறொன்றுமே
ஏர்த்திடும்நூலின்வழியேதுமறியாதவர்யேதோதினுங்கேட்பரோ
இசைந்திட்டவப்பினாலுண்டாகும்வாதமுறைபெடுத்தாடிக்காணவென்றால்
கார்த்திட்டுநூற்பயன்கருத்தாலறிந்துமேகைமுறையுஞ்செய்துகாண்பாய்
காசினியிலின்னமும்வெளியாயுரைப்பரோகருத்தினாலறியவேணும்
ஆர்த்திடுந்தண்டையணிகாளியோடாடிடுமையனையறிந்துகொள்வாய்
அகத்தினடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனனே. (எ0

### இதுவுமது

பிண்டமுப்பப்புறம்பிரமாண்டமுப்பதாம்பேர்சிங்கிவழலையுப்பாம்
போண்டமுப்புசெயநீருமுப்பதாம்பேர்பாறையுப்பதாகும்
கண்டிலர்தீயுப்புகாண்பழம்பளியுப்புகருதுலூஷரவப்புமே
கல்லுப்புமுதலானகாரணப்பெயரெலாங்கருதுமுடல்மலமுப்பதாம்
கண்டிதைக்கைக்கொளும்நியாயமுஞ்செய்கையும்கருத்துறவறியவேணும்
காணிடில்வாசிவசம்நனமனஸ்தம்பமும்கர்த்தனாலறியவேணும்
அண்டுமதிகங்கையணியம்பலத்தாண்டவனையறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (எக

### இதுவுமது

தேவையெனில் கேட்டிடுதெரிவைநீயுப்பையுந்தேகத்தினின்நெடுக்க
தெரிந்துகொள்வாசிவசந்தேருமனஸ்தம்பமும்ஸ்திரவசப்பட்டபின்பு
கோவதின்பாலுடன்பாசிபயறன்னமுங்கொண்டுண்ணுதிங்கள்மூன்று
குறித்திடுங்காலத்தில்கூறுமதிநாள்தள்ளிகுடித்திடுவைசிறுநீரைதான்
பாவமதுசொல்லொணாப்பகர்கின்றநீரதில்பாராதியந்தம்விட்டு
பாருநடுநீரதில்பலமேயிரண்டுதான்பாரிலிருவேளையுண்பாய்
ஆவதுபார்சனையனுதினம்போற்றிடவறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (எஉ

### இதுவுமது

சொன்னதொருநூலின்வழிசொல்சலமிதுவாகுஞ்சொல்லிடியினுப்பென்
சுற்றமதிலக்கினிசுவாலைதானுள்ளதுசூழ்ந்திடுந்தவத்தக்கனி
அன்னதிலுமேலதிகமாம்வாசியோகமேயானபின்னவனமலந்தா
னதிலாகுமுப்புமேலாமூலபுளியுப்புவறிந்துகொள்ளங்கியுப்பாம்
முன்னமுறையப்புப்புஆனதீயென்றதுமாக்கையால் முடிந்ததன்றோ
முளரிவளர்பிரமநிலைகாணாதமூடர்தான்முப்புதனையறிவார்களோ
அன்னையெனுமம்பிகைக்கிடப்பாகமீந்திடுமையனைஅறிந்துகொள்வாய்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (எங

## இதுவுமது

இன்பமுடன்குடியென்றியம்பட்டநீரதிலியாக்கைதான்சுத்தியாகும்
யேதெனிற்கள்ளிதன்சுடுசாம்பலுப்பினாலினியநீரதின்பாலுதான்
அம்புவயிலப்படியாக்கையாமண்டலமாயிடிற்சுத்தகங்கை
ஆய்வதிலுப்புவருமறிவைநீயப்போதுவாகுமலமூலப்புளி
பம்மைநதிசூழ்புவியிறபகருபலநீரையும்பாண்டத்திலொன்றதாக்கி
பையவேகரைத்திட்டுபானுவில்லைத்திடில்படர்ந்திடுமுப்புமுப்பாம்
நண்பனுக்கன்பராயடைந்தவர்க்காத்திடுமமையனையற்ந்துகொள்வாய்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (--

## பூசைகாலமறிய

காலமதுவாறுதானாலாகுமப்புறங்கருதுரெண்டேகமென்பார்
காசினியில்வாரமதுபக்ஷநாட்பூசையாம்பகர்திங்களாண்டுபூசை
கோலமுடனித்தியநைமித்தியமென்றுறுங்குறைவிலாவுபசாரமோ
கூறுபதினாறுபின்ஷோடசதீபமாங்குறைவில்லாதௌபாசனம்
மாலையினடத்தலும்கீதமுதல்வாத்தியம்மாநடனமுதலானதும்
மாசிலாத்தேவாரமோதலும்பலியடுதன்மனத்துடன்புஷ்பாஞ்சலி
ஆலமமர்கண்டனுக்கனுதினமுமானதாமதிற்குறையலழகில்லையா
மகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே (எரு

## திருப்பக்ஷபலன்

கூறுவிற்பானுகூடுநாள்நாழிகைகுறுகினும்பிரதோடகாலங்
கூடுமுற்றேதியானநாளானதேகுறித்ததிருப்பக்ஷியென்பார்
பூனுநாளுதயமுன்புள்ளெழும்போதினில்போற்றிவிண்ணோரையேதான்
பூசைதானெவர்செய்தபோதிலம்பரிவரவர்புவிமீதுமாங்கவருடம்
பேணுபலன்நாளொன்றிலுண்டெனறுரைக்குமேபெரிதானவாகமங்கள்
பேரிரவியுதித்தபின்செய்யினீதில்லையாம்பேசிடுமாகமந்தான்
ஆணவமடக்கலாம்செய்பிழையனைத்தையுமழித்தவனையாட்கொள்ளுவாய்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (எசு

## பிரதோடகாலம்

நண்ணுதிரயோதசிநாவதேபிரதோடம்நவிலிருபத்தாறுநின்மேல்
நல்லிரவின்மூன்றுகான்மூன்றுநாழிகையளவுநல்லபிரதோடமென்பார்
உண்ணலதுநீத்தீசராலயத்துட்புகுந்தேத்திபிரதக்ஷணஞ்செய்
யோதுசிவநந்தியிருகொம்பினடுதிருஷ்டியாய்க்குறித்துசிவலிங்கம்நோக்கி
வெண்ணந்திகேசுரன்பின்னின்றுவிழைவினான்மேவிநின்றுளமிறைஞ்சி
விமலசிவலிங்கத்தையரகராவெனச்சொல்லிவிழைந்துதெரிசத்தோர்க்
அண்ணலருளாறசெல்வமாயுளும்பெறுவயேனாதியானபரனே (கெலாம்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (எஎ

## அபிஷேககாந்தியனைநவேத்தியம்

அண்ணலுக்கபிஷேகமானவுடனக்கினியகடுதனிலதிகரித்தே
அமருதிரிலோகமுணவாற்றலாவாரப்போஅமுதவகைநைவேத்தியம்
திண்ணமெனப்பூசையுபசாரவகைசெய்பவர்தீர்க்காயுசைப்பெறுகுவார்
திறமிலாதவர்களுடைத்தேயசுடனூக்கமுந்திறல்வயதுந்தின்றுவிடுவார்
கண்ணினிதுகண்டபலனீதாகுமென்றுதான்கருதுதேயாகமங்கள்
கர்த்தன்முதல்மற்றுமுளவமரருக்கவ்வாறுகாசினியில்நீகருதுவா
யண்ணுதல்சேர்கண்ணுளனையனுதினந்துதித்திடவறிந்துகொள்ளவனிமீ
லகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (எஅ

## உபசாரவகை

அர்க்கியம்பாத்தியமாசமன்னியத்துடனமருதற்காசனந்தான்
அழகானஸ்தானநீருடைவஸ்த்ரசந்தனமமைவதேராருபவீதமும்
செருக்கல்பினாசமனஞ்செப்பிடுமக்ஷதைசேர்ந்தநற்றூபதீபம்
செய்யுநன்மலர்தூவல்நைவேதனம்பானியஞ்செப்பினடைக்காய்தோத்திர
வர்க்கமுடனிதனையுபசாரவகையாமென்பர்வையகத்தறிவுளோர்கள்
வழுவிடாதிதிலதிகம்ராஜோபசாரவகைவழுத்துமேயாகமங்கள்
அர்க்கல்செய்துர்க்கைவலியய்யனைப்போற்றிடவறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே (எகூ)

## சிவார்ச்சனைப்பலம்

எழிலேறுதேகமுமெண்போகவித்தையுமீகையுஞ்சன்மார்க்கமும்
ஈறிலாகீர்த்தியுமினிதானதாரமுமிணங்குநல்வீடுவயதும்
பொழிலேறுகழனியும்புத்திரசந்தானமும்பொறுமையுறுசுகணகுணமும்
பொன்னாதிதானியம்வாஹனநற்றூசுபோகாதவாளடிமையுஞ்
சுழியேறுகபிலையுஞ்சொல்விஜயஉளக்கமுஞ்சுபசத்திஅதிமகிழ்ச்சியுஞ்
சோர்விலாச்சந்தோஷஞ்சொல்லொழுக்கத்துடன்சூதுநோய்யில்லாமையும்
அழிவுதபுமையனையர்ச்சனைசெய்பலனனைத்தையுந்தருவதாகு
மகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (அ0

## தீபாராதனைவகை

நாகதீபத்தொடுகெஜமகவதீபமும்நல்லிடபநவிதீபமு
நாடுதற்கரிபுருஷமிருகதீபமாகுமாம்நல்வியாக்ரகுக்குடந்தான்
மோகமுடன்ரததீபம்நக்ஷத்திரதீபமாம்முடிவிலாமேருதீபம்
முதன்மையாங்கடதீபமுறைதட்டிலைந்ததாமுறைமையிதுபதினாறுதான்
தாகமாமேருவுடன்கைலைவில்வார்த்திதான்றக்கதொருபஞ்சஹார்த்தி
தப்பாதுகொடைவிசிறிசாமரந்தர்ப்பணந்தடையின்றிதூபதீப
ஆகமெய்ப்பாதியாயம்பிகைக்களித்திடும்பரமனுக்காளாகுவார்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (அக

## திருவரத்துறைநாதசதகம்

### ஆகமம்28க்குப் பெயர்

காமிகாகமத்தொடுயோகசஞ்சிந்தியங்காரணமசிதபிம்பங்
கருதரியதீப்தமொடுசூக்ஷ்மஸஹஸ்திரந்தொன்விஜயசுப்பிரபேதம்
தாமியத்தொடுவீரம்ரவுரவமனலமாம்ஸவாயம்புவமஞ்சுமானம்
தக்கநிசுவாசமகுடமொடுவிமலமாந்தருசந்திரஞானகிரணம்
நேமியத்தொடுலளிதஸித்திசந்தானநேருசர்வோத்தமந்தான்
நேரிலாவாதுளநிறைபுரோத்கீதமாம்நேர்பாராமேசுவரந்தா
னாமியம்மொழிநான்கேழதரமாகமமிதிலுள்ளபேராகுமாம்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (அஉ

### லிங்கவகை

காசினியிலிங்கவகைபேழுதாங்கண்டிடுங்காண்சுவயந்தெய்வீகமாம்
கண்டுகொள்ளாரணமானுஷம்ராக்ஷஸங்கருதுமாரிஷம்பாணமாம்
தேசிகனந்றுறைபிரிவுமேழதாமிவைக்குரிமைஇருபதினெட்டதாகும்
தெரிதியின்னீசருக்சின்னவாகமமென்னவேர்ப்பாடுமுன்னமுளது
வாசியாரதைஅறியார்வழக்கமுந்தப்புவார்வையகத்ததில்வழங்கும்
வாகானகாரணங்காமியமகுடமொடுவளர்சந்திரஞானகிரணம்
ஆசையாயமர்ந்தருளும்மண்ணலுக்கானதென்றறைகுவாரறிந்தபெரியோர்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (அங

### அர்ச்சகனியல்பு

ஆதிசைவத்துள்ளநன்மரபினுரியனாயாகமலொழுக்கமுளனா
யாகமானுஷ்டானகாயத்திரியுடையனாயாலயமுறையாவையும்
போதியாஞானமுளபுத்திவானாசாரியவமிஷேகபுனிதமுளனாய்
பொல்லாதரரேகசினம்லோபகுணமில்லனாய்பூணுருவில்குறையிலோனாய்
நீதியாநன்மார்க்கநெறியுளானசானிகமுசிவபூஜைநேமம்
நேர்ந்துவரிலர்ச்சகர்க்கழகென்றுரைப்பரேநெடியகடல்சூழ்புவியிலே
யாதியாமண்ணலுக்கனுதினமுமன்பனென்றறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (அச

### ஆலயத்தில்செய்குற்றமறிய

ஆசரரமில்லாமலாலயநுழைவதுமாலயத்தெச்சிலுமிழ்தல்
ஆனவதில்செல்போதில்பல்விளக்காலமலும்மாலமரபுடையிலாதுரும்
லேசாகமலஞ்சலஞ்கழித்திடுதல்நாசிநீர்சிந்திடுதலேறாசனம்
மெழிலுடன்சயினத்தல்கானீட்டியுட்காரர்த்லியல்பிலாச்சூதாடலும்
பாசுமுடன்மயிர்கோதிமுடித்திடுதல்தம்பூலம்பாராமலுண்டிடுதலும்
பாங்காகதலைமீதுதோண்மீதுதூசிடுதல்பகர்பாதகுறடுரகைஷ
ஆசவுசமுடனேகலானதும்பிழையென்பர்ஆலமமர்கண்டன்மனையில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (அரு

## இதுவுமது

நிற்கின்றவிக்கிரகந்தன்னையேதீண்டிடுதனிர்மாலியம்தாண்டலும
நீக்கிவைத்திருக்கின்றநிர்மாலியந்தனைநேர்படமிதித்தல்தானும்
சிறக்கின்றஸ்தூபியுடன் துஜஸ்தம்பம்பலிபீடஞ்சேர்தெய்வநிழல்மிதித்தல்
சிறப்பிலாதவீண்வார்த்தைபேசல்பின்சிரித்தலுஞ்செய்சண்டைவிளையாடலு
மிறுக்கல்நல்பலிபீடமீகனடுவேகலுமெழில்மாதரைக்காண்டிடில்
லிருதயத்தெண்ணலும்மீசனைச்சிலவென்னவிறைஞ்சிடாதிருத்தலேனும்
அறுக்கின்றபெரும்பிழையாருமேசெய்யொனாதறிந்துகொள்ளவனிமீளல்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (அசு

## இதுவுமது

இறைவனுக்கபிஷேகநைவேதனச்சமயமெவருகிமேதெரிசித்திடா
இவ்வுடல்பூமிபடநாணிப்பணிந்திடாரிழிவானகுலத்துதிப்பார்
மறைவிதிப்படியந்தரவாலயத்தொருபொருளைமனதினால்பெறநினைத்தல்
மஹேசுனுக்குபயோகமானபின்னீத்திட்டுமாதருக்குதவிசெய்வித்தல்
உறைவிதிப்படிப்பணியார்வலம்வருதலானதுமுயர்மூன்றுதொகைகுறைத
உறுகோயிற்கேதேரனுதவாமல்செல்லுமுளத்தினிடைவேறெண்ணலும்
அறையுமிவையாவையும்மாலயப்பிழையென்னறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (அஎ

## சிவதரிசனபலன்

நித்தியசிவதெரிசனஞ்செயல்வேண்டுநீதியாய்நேரிலாதவர்களுக்கோ
நேர்திங்கள்குருபுகர்வாரத்தினாயினுநெடியுவாப்பிரதோடகாலம்
பத்தியமவாசியுடனாதிரையங்கினாள்பகர்மாசப்பிரப்பிலேனும்
பாரறியுமேகிரகணஞ்சிவராத்திரிநவராத்திரிபகர்கிஷ்ணசதுர்த்தசியுமே
முத்திதருமேயபரவஷ்டமித்திதியிலுமுக்யமாசோற்சவத்தும்
முத்திகொள்ளின்னாளில்முதல்வனைப்போற்றிடுவுரைத்திடுமாகமந்தான்
அத்திபுனையயயுனருளண்பருககன்றியேயார்பெறுவரவனிமீதி
லகத்திடையகலாமல்நிறுத்திவை யனுதினமரத்துறைப்பதிநாதனே. (அஅ

## மாசாபிடேகம்

கோலமுடனபிஷேகம் விதிதிங்களில் செயல்குறித்து வருபூர்ணைநாளில்
கூறினோமாடெருதுவீணைபின்களிறரிகுறித்தநல்குமரிசெட்டி
நீலவுடலாந்தேளுவில்லுபின்மகரமுனீளகுடங்கயநீறதாய்
நேர்மருக்கொழுந்து பலாமுப்பழஞ்சர்க்கரை நேர்மையுளவதிரசந்தான்
சீலமுடனேசெயுந்திரட்டிப்பாலன்னமாஞ்செய்வகைத்திபார்ச்சனை
செப்புநற்கிருதம்பின்றேனுதிருமதுசெழுந்தயிரீராறுதான்
ஆலமமர்கண்டனுக்கபிஷேககவிதிமானதிதுவென்றுரைப்பார்
ரகத்தினிடெயணுகாமல்நிறுத்திவையனுதிதிமரத்துறைப்பதிநாதனே. (அகூ

## திருவரத்துறைநாதசதகம்

ஆமாதி திங்கள்சேய்செட்டி பொன் வெள்ளிசனியமருமிவ்வாரத்தினில்
லானநல்லில்வந்துளபங்கவித்தமாமானவோர் மாதுளம்பூ
நாமாதிலவங்கமலர்செப்புநற்கொழுந்துருநாடிடும்விஷ்ணு காந்தி
நன்மனத்துடனாடிசிவனைவர்ச்சித்திடில்நவிலுபலனேதென்பையோ
காமாதியெண்சித்திசெல்லமுமைந்தருங்கருதுமெய்ஞானகல்வி
காசினிக்கரசாவன்கருதுருனோய்தொலைந்திடுங்கண்டமறிந்திவைசெய்குவாய்
யாமாது தலைதனிலமையுற்றவேணியானவவநியோர்க்கருள்புரிகுவா
கத்தினிடையணகாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (கூ0

நற்றீர்த்தமபிஷேகநல்லெண்ணை யரிசிமா நன்மஞ்சணெல்லிமுள்ளி
நல்லபில்லபிஷேகமரிதானநெய்தயிர்நற்புனுகுஜவ்வாதுதான்
கற்றோது பஞ்சாமிர்தசர்க்கரைக்கதலி பிலாகாண் மாதுளமிச்சையும்
காதலொடுநாரத்தை கொளஞ்சி கற்பூரங்கருதுதேனிளனீரையுஞ்
சத்தியஞ்சந்தனஞ் திரட்டுப்பால்மதுக்ஷீரஞ்சார்பெறுங்கரும்புநீராஞ்
சாத்தன்னம்வில்வநீர் ஸ்தபனநீர்கலசநீர் சாருமேரத்னோதகம்
அத்தியுரிபோர்த்திடுமண்ணலுக்கபிஷேகமானதிதுவேயறிகுவா
யூகத்தினிடையநலாமல்நிறுத்திறையனுதினமரத்துறைப்பதிநாதனே. (கூக

## லிங்கபூசை

ஆமாறுமண்லிங்கபூசைபுரிவோர்க்குமாயுசுவிருத்தியுண்டாம்
மாவுநற்சாணசிவமமிர்தமுண்டாநல்லவீபூதிமுத்தியுண்டாம்
கூமேருலிங்கமதுசெய்தபேர்க்கின்பமாங்கூறுநல்மைந்தருண்டாம்
கோருநற்சந்தனங்கொடுக்குநற்பாக்கியங்கூடுபூக்கட்டடந்தான்
தாமேருநவனீதக்கநற்றாரமாந்தானுத்திராகஷமானால்
தரணியல்பிறவியலைத்தருனல்லகுளமெனிற்றருகுமதுபூசெல்வமே
யாமாதுயெடப்பாகன்ரய்யாறமவனையே அறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே (கூஉ

## இதுவுமது

மொழிபெயருமரிசனம்லிங்கமேயிசைதருமுகிழ்மலர்லிங்கசுகமா
முறையிடுமமுதெனுமிலிங்கமேசம்பத்துவுரையசலிங்கமோதரன
னொழிவலாதர்க்மாம்ரோதினாராகமமுயாகுளலிங்கபூசை
உலகத்தில்சிவபக்திதருகுமென்றுரைப்பரேவுளவருணநான்கினோரும்
இழிவிலாதாத்துமசிவபூசைபுரிவோர்க்குமிவைபலனெனவுரையார்
இனியபொன் வெள்ளிசெம்புடன் படிகமுமியல்நான்குபலனுள்ளதாம்
அழிவிலாதரத்துறையில்தனிலொனறானமகிபனைமறிந்துகொள்வாய்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே.

## இதுவுமது

போகுமேநம்பாவம்புகழ்தூபமதனிலேபோய்விடுமிருத்யூதீபம்
பொல்லாதநாகதீபமேபுத்திரர்பொங்குபசுவிருத்திரிஷபம்
ஏகுமேரோகநாசமாம்நக்ஷத்திரமெழிலானகடதீபமோ
ஏறிவருங்குற்றங்களத்தனையுந்தீர்த்துவிடுமிசைபுருஷமிருகதீபமோ
வாகுடன்சர்வசித்தியாம்பலன்தரும்வையகங்கொடையளிக்கும்
வாகனதர்ப்பணமெழிலுளதுவிசிறியோவளருமெய்வர்க்கசுகமே
யாகுநீராஞ்சனமனந்தபலனென்டரேயறிந்துகொள்ளவனிமீதில்
லகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே (கூச

## சிவதரிசனகாலபலன்

பிரதிதினங்காலையில் சிவதரிசஞ்செயில்பிரிந்துவிடுநிசிபாவமே
பெருமைதருமத்தியானம்பிறைதானைநோக்கிடிற்பெயர்நதிடும்பகற்பாலமே
மறதிக்கிடமின்றிமாசாயரக்ஷயில்மஹேசனைத்தரிசித்திடில்
மானிடர்க்கனுகாதுமாபிறவிஏழினுள்மாபாதகந்தானுமே
கருதிசொற்படியர்த்தசாமத்திற்சூலியைசோராமல்பார்த்தபேர்க்கு
சொல்துரகமோரைந்துகோடியாம்யாகபலன்சொல்லுதேமகுடாகம
அறிதியிதையனுதினமும்மரன்றனைத்தொழுதுவாழறிந்துகொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவைஅனுதினமரத்துறைப்பதிநாதனே (கூரு

## சிவசொத்தைஅபகரித்தல்

பேசியவாலயப்பொருளெனும்பேருளதைப்பிசகதாயணுவாகிலும்
பெத்திடுமானிடர்பெருநரகில்வீழ்வர்பின்கிருமிபுழுவேனமாவார்
தேசிக்குக்குடமாவர்தெளிவிலாக்குக்கலாய்தெரியட்டையீளையாகி
தேகமேயெடுத்திடுவர்தீர்க்கும்வகைகலாணார்கள்தேள்குளவியாதி
ஈசன்நன்பொருளுக்கேற்படும்குற்றத்தையெந்தனாள்சொல்லலாமோ
எத்தவஞ்செய்யினுமிதைநீக்கவறியார்களெம்மரபுளோராகினும்
வாசவன்றெழுமண்ணல்றளர்நாமமேதுதிவரிசையுடனவனிமீதில்
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துருறைப்பதிநாதனே. (கூசு

## இதுவுமது

இரவிமுன்னிருள்வரி னுமெழில்சோரமங்கைக்கினியகற்புண்டாயினும்
யேதிலாகாமிக்குஞானமுண்டாயினுமிறைகடவீரினிதாயினும்
குருவிகொக்காம்பறவைகோதிலாச்சீவனைகொன்றபேர்வீட்டையினும்
கொடியபாம்பதின்வாயிலமிர்தமேதங்கினும்கூறுவனல்புனலாயினும்
திருமருவுமார்பனரன்றேவதைபூசுரன்நீதிலாரிவர்பொருளையே
தெரிந்தேனுந்தெரியாமலேதேனுமுண்டவனைத்தீநரகம்விட்டிடாது
ஆறுதலையணியண்ணலகத்தினும்போகாதறிந்து கொள்ளவனிமீதில்
அகத்தினிடையகலாமல் நிறுத்திவையனு தினமரத்துறைப்பதிநாதனே. (கூஎ

## பிரத்தியக்ஷதெரிசனம்

இப்புவியில்சீர்காழியிளைவனுக்கிந்தனனின்பநித்திலசிவிகைதா
னெழிலானசின்னமொடுதாளமுந்தந்தனனிறைஞ்சுமப்பர்க்குநேராய்
தப்பிலாக்கடந்தையிற்றானருளினன்முத்திரைதரித்தபின்காயசுத்தி
தப்பாதுவாகுமெனவப்பர்க்குரைத்தனன்றரணியில்வால்மீகரை
எப்புவியில்திகமிதிவிருமென்றிசைத்துபின்னிரவிசுதனானகோட்கு
எழில்பெருமையிந்திங்கிருக்கவைத்தாறன்றியல்வாணிசாபம்நீத்தா
ரப்புடனாகமதிமத்தையணியய்னையறிந்துகொள்ளவனிமீதி
லகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே (௯அ

## மனுஷியர்க்குவேண்டியது

சஞ்சரித்திவ்வுடல்சாவுநாளளவினுஞ்சஞ்சலந்தானிலாமல்
சத்தாகினுந்தனந்தாழமற்சடலநோய்சாராமல்வெங்கோபமும்
கொஞ்சமெனினுந்தீதுசெய்யாமலொருவர்மேல்கோளுரைகள்பேசாமலும்
கோறிவருமியாசகற்கில்லையெனுமாலோபகுற்றங்கள்வாராமலும்
வஞ்சமனமில்லாமல்வயிரவகைவாராமல்வானோரைத்துதிசெய்திட
வருபக்தியொடுநேமஞ்சத்தியவசனமும்வாழமனமெனக்கருளுவா
யஞ்சலிசெய்திடலறிந்திலான்செய்பிழையனைத்தையும்நீக்குமரனை
யகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (௯௯

## இதைச்சேர்ந்தசப்ததுறையின்பெயர்

இத்தலம்வால்மீகரிதன்மேற்குவதிட்டபுரமிருபபரேவதிட்டருந்தா
னதின்னருதியாடுதுறைசுக்கரீவராசனுஞ்சுகமுடன்பூசைசெய்தான
நற்றவாவதின்மேற்குநாடுமிருகண்டுவும்நற்றவமிழைத்துறையதாம்
நல்லதாமதின்வாயுற்றிருமாலயன்ராகுதாபித்தவாலந்துறை
மெத்தவும்பெரிதிதாமிதின்வடக்குள்ளதுதிருவாதிசத்திதுறைதான்
மேதினியனின்னமும்திருக்கரத்துறையொன்றுமேலிடுமேழுதுறையும்
சத்தியாய்சகலபலன்சேருவோரெவர்க்கெல்லாஞ்செகமீதிலுண்டென்பரே
அகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (௧00

## சதகமுரைத்தவருடையபெயர்விபரம்

சீர்மேவுகலிவருடநாலதாமாயிரஞ்செப்பினோந்தொளாயிரம்பின்
சேர்ந்திடுந்தொண்ணுறுவாண்டதாஞ்சென்றதுசொற்சாலியாண்டுவருடம்
யேர்மேவுமாயிரமெண்பத்தினொன்றதாமதில்செல்லுபிரபவாதியோ
இத்தரையிலாம்பெயர்விரோதியினப்தமாமியல்மகரபூர்வபக்கம்
தார்மேவுதிகைதிதிசெக்குநாள்புதவராந்தலமரத்துறையிலுறைவோன்
தருமறைகுலத்தவன்வைணவப்பூசுரன்றருபெயரரங்கசாமி
ஆர்மேவு அண்ணன் மேலரத்துறைப்பெயர்சதகமமைத்தனன்னவனிமீதி
லகத்தினிடையகலாமல்நிறுத்திவையனுதினமரத்துறைப்பதிநாதனே. (௧0௧

சதகம் முற்றிற்று

அக செய்யுள் ௧0௧

உ

திருச்சிற்றம்பலம்

# திருநெல்வாயிலரத்துறை

## திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

### பண்-பியந்தைக் காந்தாரம்

திருச்சிற்றம்பலம்.

எந்தையீசனெம்பெருமானேறமர்கடவுளென்றேத்திச்
சிந்தைசெய்பவர்க்கல்லால்சென்றுகைகூடுவதன்றாற்
கந்தமாமலருந்திக்கடும்புனனிவாமல்குகரைமே
லந்தண்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே (க)

ஈரவார்சடைதன்மேலிளம்பிறையணிந்தவெம்பெருமான்
சீருஞ்செல்வமுமேத்தாச்சித்தர்கடொழச்செல்வதன்றால்
வாரிமாமலருந்திவருபுனனிவாமல்குகரைமே
லாருஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (உ)

பிணிகலந்தபுன்சடைமேற்பிறையணிசிவனெனப்பேணிப்
பணிகலந்துசெய்யாதபாவிகடொழச்செல்வதன்றான்
மணிகலந்துபொன்னுந்திவருபுனனிவாமல்குகரைமே
லணிகலந்தநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (ங)

துன்னவாடையொன்றுடுத்துத்தூயவெண்ணிற்றினராகி
யுன்னிநைபவர்க்கல்லாலொன்றுங்கைகூடுவதன்றாற்
பொன்னுமமணியுந்திப்பொருபுனனிவாமல்குகரைமே
லன்னமாருநெல்வாதயிலரத்துறையடிகடம்மருளே. (ச)

வெருகுரிஞ்சுவெங்காட்டிலாடியவிமலனென்றுள்கி
யுருகிநைபவர்க்கல்லாலலொன்றுங்கைகூடுவதன்றான்
முருகுரிஞ்சுபூஞ்சோலைமொய்ம்மலர்சுமந்திழிநிவாவந்
தருகுரிஞ்சுநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (ரு)

உரவுநீர்ச்சடைக்கரந்தவொருவனென்றுள்குளிர்ந்தேத்திப்
பரவிநைபவர்க்கல்லாற்பரிந்துகைகூடுவதன்றாற்
குரவநீடுயர்சோலைக்குளிர்புனனிவாமல்குகரைமே
லரவமாருநெல்வாயிலரத்துறையடி கடம்மருவே (சு)

நீலமாமணிமிடற்றுநீறணிசிவனெனப்பேணுஞ்
சீலமாந்தர்கட்கல்லாற்சென்றுகைகூடுவதன்றாற்
கோலமாமலருந்திக்குளிர்புனனிவாமல்குகரைமே
லாலுஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (எ)

செழுந்தண்மால்வரையெடுத்தசெருவலியிராவணனலற
வழுந்தவூன்றியவிரலான்போற்றியென்பார்க்கல்லதருளான்
கொழுங்கனிசுமந்துந்திக்குளிர்புனனிவாமல்குகரைமே
லழுந்துஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (அ)

நுணங்குநூலயன்மாலுமிருவருநோக்கரியானை
வணங்கிநை பவர்க்கல்லால்வந்துகைகூடுவதன்றான்
மணங்கமழ்ந்துபொன்னுந்திவருபுனனிவாமல்குகரைமே
லணங்குஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (கூ)

சாக்கியப்படுவாருஞ்சமண்படுவார்களுமற்றும்
பாக்கியப்படகில்லாப்பாவிகடொழச்செல்வதன்றாற்
பூக்கமழ்ந்துபொன்னுந்திப்பொருபுனனிவாமல்குகரைமே
லார்க்குஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (க0)

கறையினார்பொழில்சூழ்ந்தகாழியுண்ஞானசம்பந்த
னறையும்பூம்புனல்பரந்தவரத்துறையடிகடம்மருளை
முறைமையாற்சொன்னபாடன்மொழியுமாந்தர்தம்வினை போய்ப்
பறையுமையுறவில்லைப்பாட்டிவைபத்தும்வல்லார்க்கே. (கக)

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம்

திருவரத்துறை திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

கடவுளைக்கடலுள்ளெழுநஞ்சுண்ட
வுடலுளானையொப்பாரியலாதவெம்
மடலுளானையரத்துறைமேவிய
சுடருளானைக்கண்டீர்நாந்தொழுவதே. (க)

கரும்பொப்பானைக் கரும்பினிற் கட்டியை
விரும்பொப்பானை விண்ணோரும் அறிகிலா
வரும்பொப்பானையரத்துறைமேவிய
சுரும்பொப்பானைக்கண்டீர்நாந்தொழுவதே (உ)

ஏறெப்பானையெல்லாவுயிர்க்குமிறை
வேறொப்பானைவிண்ணோருமறிகிலா
வாறொப்பானையரத்துறைமேவிய
வூறொப்பானைக்கண்டீர்நாந்தொழுவதே (ஙு)

பரப்பொப்பானைப்பகலிருணன்னிலா
விரப்பொப்பானையிளமதிசூடிய
வரப்பொப்பானையரத்துறைமேவிய
சுரப்பொப்பானைக்கண்டீர்நாந்தொழுவதே. (ச)

நெய்யொப்பானை நெய்யிற்சுடர்போல்வதோர்
மெய்யொப்பானைவிண்ணோருமறிகிலா
ரையொப்பானையரத்துறைமேவிய
கையொப்பானைக்கண்டீர்நாந்தொழுவதே. (ரு)

நிதியொப்பானை நிதியிற்கிழவனை
விதியொப்பானைவிண்ணோருமறிகிலா
ரதியொப்பானையரத்துறைமேவிய
கதியொப்பானைக்கண்டீர்நாந்தொழுவதே (சு)

புனலொப்பானைப்பொருந்தலர்தம்மையே
மினலொப்பானைவின்ணோருமறிகிலா
ரனலொப்பானையரத்துறைமேவிய
கனலொப்பானைக்கண்டீர்நாந்தொழுவதே (எ)

பொன்னொப்பானைப்பொன்னிற்சுடர்போல்வதோர்
மின்னொப்பானைவின்ணோருமறிகிலா
ரன்னொப்பானையரத்துறைமேவிய
தன்னொப்பானைக்கண்டீர்நாந்தொழுவதே. (அ)

காழியானைக்கனவிடையூருமெய்
வாழியானைவல்லோருமென்றின்னவ
ராழியான்பிரமற்குமரத்துறை
யூழியானைக்கண்டீர்நாந்தொழுவதே. (கூ)

## சுந்தரமூர்த்திசுவாமிகள் தேவாரம்

கலையொப்பானைக்கற்றார்க்கோரமுதினை
மலையொப்பானைமணிமுடியூன்றிய
வலையொப்பானையரத்துறைவேிய
நிலையொப்பானைக்கண்டீர்நாந்தொழுவதே (க0)

திருச்சிற்றம்பலம்

## சுந்தரமூர்த்திசுவாமிகள்

## பண்-இந்தளம்

திருச்சிற்றம்பலம்.

கல்வாயகிலுங்கதிர் மாமணியுங் கலந்துந்திவருந்நிவவின்கரைமே, னெல்வாயிலரத்துறைநீடுறையுந் நிலவெண்மதி சூடிய நின்மலனே, நல்வாயில் செய்தார் நடந்தாருடுத்தார் நரைத்தாரிறந் தாரென்றுநானிலத்திற், சொல்லாய்கழிகின்ற தறிந்தடியேன் றொடர்ந்தேனுய்யப்போவதொர் சூழல் சொல்லே (க)

கறிமாமிளகும் மிகுவன்மரமு மிகவுந்திவருந்நிவவின்கரைமே, நெறிவார்குழலாரவர்காணநடஞ்செய்நெல்வாயிலரத்துறை நின்மலனே, வறிதேநிலையாதவிம்மண்ணுலகின்னரனாகவகுத்தனை நானிலையேன், பொறிவாயிலிவையைந்தினையும்மவியப்பொரு துன்னடியே புகுஞ்சூழல்சொல்லே. (உ)

புற்றாடரவமரையார்த்துகந்தாய்புனிதாபொரு வெள்விடை யூர்தினா, யெற்றேயொருகண்ணிலனின்னையல்லானெல்வாயில ரத்துறைநின்மலனே, மற்றேலொருபற்றிலனெம்பெருமான்வண் டார்குழ லாண்மங்கைபங்கினனே, யற்றார்பிறவிக்கடனீந்தியேறி யடியேனுய்யப்போவதொர் சூழல்சொல்லே. (ங)

கோடுயர்கோங்கலர் வேங்கையலர்மிகவுந்திவருந்நிவவின்கரை மே, னீடுயர்சோலைநெல்வா யிலரத்துறைநின் மலனே நினைவார் மனத்தா, யோடுபுனற்கரையாமிளமையுறங்கிவிழித்தாலொக்குமிப் பிறவி, வாடியிருந்துவருந்தல்செய்யாதடியேனுய்யப்போவதோர் சூழல்சொல்லே. (ச)

உலவுமுலகிற்றலை கற்பொழியவுயர்வோடி ழியுநிவவின்கரைமே னிலவுமயிலாரவன் பயிலநெல்வாயிலரத்துறைநின்மலனே.

## சுந்தரமூர்த்திசுவாமிகள் தேவாரம்

புலனைந்துமயங்கியகங்குழையப்பொருவேலோர்நமன்றமர்தரநலி யவலம் வந்து மயங்கியயர் வதன்முன்னடியே னுய்யப்போவதொர் சூழல் சொல்லே. (ரு)

ஏலம் மிலவங்கமெழிற்கனகமிகவுந்திவருந்நிவவின்கரைமே னீலம்மலர்ப்பொய்கையிலன்னமலிநெல்வாயிலரத்துறையாயொருநல், வாலூன்றவருந்தும்முடம்பிதனைமகிழாதழகாவலந்தேனினியா, னாலனிழலிலமர்ந்தாயமராவடியேனுய்யப்போவதொர் சூழல்சொல்லே,

சிகரம்முசத்திற்றிரளாரகிலும்மிகவுந்திவருந்நிலவின்கரைமே
ணிகரின்மயிலாரவர்தாம்பயிலுநெல்வாயிலரத்துறைநின்மலனே
மகரக்குழையாய்மணக்கோலமதேபிணக்கோமதாம்பிறவியிதுதா,
னகரமுதலினெழுத்தாகிநின்றாயடியேனுய்யப்போவ
தொர்சூழல்சொல்லே. (எ)

திண்டேர்நெடுவீதியிலங்கையர்கோன்றிரடோளிருபஃதுநெரித்தருளி, ஞெண்டாடுநெடுவயல்சூழ்புறவினெல்வாயிலரத்துறை நின்மலனே, பண்டேமிகநான்செய்தபாக்கியத்தாற் பரஞ்சோதி நின்னாமம்பயிலப் பெற்றே, னண்டாவமரர்க்கமரர்பெரமானடி யேனுய்யப்போலதொர் சூழல்சொல்லே. (அ)

மாணவுருவாகியொர் மண்ணளந்தான் மலர்மேலயன்றேடியுங் காண்பரியாய், நீணீண்மடிவானவர்வந்திறைஞ்சுநெல்வாயிலரத் துறைநின்மலனே, வாணார்நுதலார்வலைப்பட்டடியேன்பலவின் கனியீந்தது போல்வதன்முன், ஆணோடு பெண்ணாமுருவாகி நின்றாயடியேனுய்யப்போவதொர்சூழல் சொல்லே. (கூ)

நீரூருநெடுவயல்சூழ்புறவினெல்வாயிலரத்துறைநின்மலனைத் தேரூர் நெடுவீதிநன்மாடமலிதென் னாவலர்கோ னடித்தொண்டுப ண்ணி, யாரூரனுரைத் தனநற்றமிழின்மிகுமாலையொர்பத் திவைற்றுவல்லார், காரூர்களிவண்டறையானை மன்னரவராகி யொர்விண் முழுதாள்பவரே. (க0)

திருச்சிற்றம்பலம்.

------------

திருச்சிற்றம்பலம்

## ஸ்ரீஅருணகிரிநாதர்
## திருவாய்மலர்ந்தருளிய திருப்புகழ் திருவரத்துறை

கறுவிமைக்கணிட்டினிதழைத்தியற்
கவிசொலிச்சிரித்-துறவாடி
களவுவித்தையிட்டுளமுருக்கிமுற்
கருதிவைத்தவைப்-பவைசேரத்
தறுகணிற்பறித்திருகழுத்துறத்
தழுவிநெக்குநெக்-குயிர்சோரச்
சயனமெத்தையிற்செயலழிக்குமித்
தருணிகட்ககப்-படலாமோ

பிறவியைத்தணித்தருளுநிட்களப்
பிரமசிறசுகக்-கடல்மூழ்கும்
பெருமுனித்திரட்பரவுசெப்பதிப்
ரபலகொச்சையிற்-சதுர்வேதச்
சிறுவநிற்கருட்கவிகைநித்திலச்
சிவிகையைக்கொடுத்-தருளீசன்
செகதலத்தினிற்புகழ்படைத்தமெய்த்
திருவரத்துறைப்பெருமாளே

௨

## திருமாந்துறை

ஆங்குடல்வளைந்துநீங்குபல்நெகிழ்ந்து
ஆய்ஞ்சு தளர்சிந்தைதடுமாறி
ஆர்ந்துளகடன்கள் வாங்கவுமறிந்து
ஆண்டுபலசென்று-கிடையோடே
ஊங்கிருமல்வந்துவீங்குகுடல்நொந்து
வோய்ந்துணர்வழிந்து-வுயிர்போமுன்
ஓங்குமயில்வந்துசேண்பெறஇசைந்து
வூன்றியபதங்கள்-தருவாயே
வேங்கையுமுயர்ந்ததிம்புனமிருந்த

## திருப்புகழ்

வேந்திழையினின்ப-மணவாளா
வேண்டுமவர்தங்கள் பூண்டபதமிஞ்ச
வேண்டியபதங்கள்-புரிவோனே
மாங்கனியுடைந்து தேங்கவயல்வந்து
மாண்புநெல்விளைந்த-வளநாடா
மாந்தர் தவரும்பர்கோன்பரவிநின்ற
மாந்துறையமர்ந்த-பெருமாளே.

வாலிகண்டபுரத்தைத் துதித்து இத்தலத்தைத் துதித்தலால் இப்புராணத்திற்கூறிய திருமான்றுறையையேயாம்.

இத்தலத்தை சிவஷேத்திரவிளக்கமுதலியவற்றில் திருமாந்துறையென்றும் வாங்குகின்றது.

## ஆதிசேடன்றுதி

ஐந்துளா னைந்துளா னைந்துளா னெனவைந்து வாயிலு மறைந்தனன், வந்துளேன் வந்துளேன் வந்துளே னெனவைந் துவடிவமாய்வந்தான், முந்தியேபுசனைக்குரியதே வனைமனாங்கா

ண்பதெவ்வாறெனாச், சிந்தையே யுற்றன னொருவராயவர்வரச்
சேடனுமண்மிசைப் படிந்தான். (க)

தியாகமன்னனு மருணைதன்னாதனுஞ் சம்புத்
தாகமற்றதோ ரீசனும்வாயுவின் றலத்துளோன்றானு
மேகமுற்றவராகபத்தவருடன் கூடியேயெழிலா
யாகமுற்றொருவராயினாரத்துறை லிங்கமூர்த்தியுமே.

## வால்மீகனிறுதி.

வெள்ளைகொண்டிடும் கைலையும் வெண்மதியவனு
வெள்ளைகொண்டிடும் ரிஷபமும் வெள்ளுழைதானும்
வெள்ளை கொண்டதில் வேட்டநீ விடுத்திலனாகி
வெள்ளையாகிய வாற்றையும் விரும்வினாயரனே.

## குருநமசிவாயரருளிய பரமரகசியமாலை

திருவரத்துறையின் மத்தினாற்சமைத்த கிவிகையும் பந்த
ருமெதிரே, வரவருள்கொடுத்தப்புகலி காவலர்க்கு வழங்கிய

வண்மையான்மறவே, னருமறைப்பெரியோர் மாதவமுனிவ
ரடைந்திடுந் தில்லையம்பதிவாழ், மருவரைக் கயிலைக்கின்றவனே
பொன்னம்பலவனே பரமராசியனே.

## ஆதிசங்கராசாரியசுவாமிகள் ஶ்லோகம்

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

## முகவுரை

அகண்டாகார நித்தவியாபக சச்சிதானந்த சொரூபராகிய சிவபெருமான் ஆன்மாக்கள் வழிபட்டுய்யும் பொருட்டுத் திருவுருக்கொண்டு வீற்றிருக்கும் சிவஸ்தலங்களுள் நடுநாட்டின் கண் மிகமேன்மையுற்று விளங்குந்தலமாம். இது நிவாநதிக்கரையிலள்ளத. திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் முதலிய மூவராலும் திருப்பதிகம் பாடப்பெற்ற. நெல்வாயில் அரத்துறை யென்றும், பிரமகைவர்த்த புராணத்தில் தேவர்களுக்குச் சொன்ன சிவஸ்தோத்திரமகிமையில்

பஞ்சபூதஸம்மிச்ர சிவஸ்தலமென்றும், வடவாலஷேத்திரமென்றும், ஊழிகாசியென்றும், திருவள்ளுவநாயனார் முதலியோர்களை பெற்ற கலைமகளவதாரமாகிய ஆதிெய்பவரது நீசத்துவத்தையொழித்து முத்தியளித்த காரணத்தால் முத்தி ஷேத்திரமென்றும் கூறுந் திருநாமங்கள் வாய்க்கப்பெற்றது. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் அடியார்கள் திருக்கூட்டத்தோடு இவ்வரத்துறையை நோக்கித் தெரிசிக்கவருங்கால் வழிநடந்துவந்த சிரமத்தோடு மாறன்பாடியில் வந்தமர அதனைப்பொறாத திருவரத்துறையப்பர் நெல்வாயிலிலிருக்கின்ற பிராமணர்களுக்கு ஞானசம்பந்தனம் பாலணைகின்றான் மான முத்தின் சிவிகை மணிக்குடையான சின்னநம்பாற்கொண்டருங் கலைக்கோனவன் பாலணைந்து கொடுமென அருளிச் செய்து அவ்வாறே ஞானசம்பந்தருக்கும். நாம் மகிழ்ந்தளிக்குங்மவைகொள்ளலாகுங் கொண்டுய்த்தல்செய்வாயென அனுக்கிரகித்து முத்துப்பல்லக்கும் முத்துக்குடையும் முத்துச்சின்னமும் கொடுக்கப்பெற்றது. ஆதித்துறை திருவர்லந்துறை திருமான்துறை திருஆடுதுறை திருவதிட்டத்துறை திருக்கரத்துறை என்னும் ஆறுதுறைகளுந் தொடர்ந்திருத்தலால் சப்த துறைகளென வழங்கப்பெற்றது. ஆதிசேடன் வால்மீகர் ஆதிசங்கராசாரியர் அருணகிரிநாதர் முதலியோர் வணங்கித்துதித்து அபீஷ்டசித்திகளை யடைந்தது. சேரசோழ பாண்டியர்களால் சிவக்குறிதாபித்துப் பூசிக்கப்பெற்றது. விஸ்வாமித்திரரும் வதிட்டரும் தீர்த்தபுரீசர் முன்பாக வாதஞ்செய்து அனேக அற்புதங்காட்டியது. ஆதிசேடன்பூசித்த காரணத்தால் அரவத்துறை யெனவும் பெயர் வழங்குகின்றது.

சப்தரிஷிகளும், விஷ்ணுவும், சனிபகவானும், அங்காரகனும் பூசித்துமேன்மை யடைந்தது. இத்தகைய அனேக ஐதீகங்களோடு விளங்கிய இந்தஸ்தலத்திற்கு சுமார் 400 பாடல்களுள்ள புராணத்தை திருத்தி அச்சிடவேண்டுமென்ற நோக்கத்தோடு சிலர் வற்புறுத்தியபடியால் ஸ்ரீ ஆனந்தநாயகி சமேத ஸ்ரீவரத்துறைநாதர் திருவருட்டுணைகொண்டு ஒருவாறு பரிசோதித்து வி.அ.சுப்பறாய தேசிகர் அவர்கள் பொருளுதவியால் அச்சிடப்பட்டது. சிவபத்திமான்கள் இப்புராண த்தையன்போடும் படித்தும் திருவரத்துறையைத் தெரிசித்து அபிமானித்தும் போகமோக்ஷங்களை யெய்துமாறு திருவருளை வழுத்துகின்றோம்.

சுபம்.

## புராணிகர்கருத்து

பெரிதுள தாகும் பெருகிய சூதர் பேசுநூற் றலங்களாம திலும்,
பெரிதுள தாகும் பேருளார்மூவர் பேர்சொலிப் பாடிய தலங்கள்,
பெரிதுள தாகு நந்தியெம்பொருமான் பேசிடும் பெரிய நற்றலங்கள்,
பெரிததினுளதோ பேசவே வேறு பெரும்புவி யுலக மூவிடத்தும்.

## சாற்றுக்கவி

சூரியவம்சத் தோனாந் தொன்முசு குந்தனென்பான்
பாரியவாரூர் தன்னிற் றியாகரைப் பதிட்டை செய்தான்
சூரியன் புதல்வ னாகுஞ் சுக்ரீவ நாமத் தோன்றல்
பேர்பெற விளக்கு வித்த வெழிலாடு துறை மற்றீதால். (உ)

ஆதலால் தலத்தின் மேன்மை யாராலுஞ் சொல்லப்போமோ
ஓதியமிருகம் புள்ளா லுண்டான தலங்க ளெல்லாம்
தீதுகண் மிகவகறறிப் பிறவியைத் தீர்க்குமென்றார்
ஆதவன் மகன்றலத்தா லமைபலனறிவாராரே. (ங)

பதவிக்குப் போகத்தக்க பகர்நெறி யீதென்றீச
னுதவிய துறையிவ் வேழு முகந்தநற்புரிகளேழும்
கதவுதலாகக் கொள்ள கைலையான்கருதித் தந்தா
னிதுவென வெண்ணிக் கொண்டேயீசர் தாளடய நன்றே. (ச)

இன்னதிக் கிச்சை கொண்டே யிருடிகளிவடம் வந்தார்
இன்னதிக் கிச்சைகொண் டேயிசைமணம் வராகன் செய்தான்
இன்னதி தன்னிலாடி லெழிற்கங்கை பலத்திரட்டி
இன்னதிக் கீடேயில்லை யெழிற்றுறை துறையோரேழும் (ரு)

உ

உடையார்பாளய ஸமஸ்தான

## வித்துவானுங்கம்பராமாயணப்பிரசங்கியுமாகிய வீரசைவக் கனகசபைக் கவிராயரவர்கள் இயற்றியது

சீரொங்கு தெய்வச்சிவக்ஷேத்திரமதனு
ளாரொங்கு நெல்வாயரத்துறைக்குப் பாரோங்க
மன்னுபுராணமதை மாணரங்காசாரியென்பா
ருன்னி யுரைத்தாருணர்ந்து.

சம்பந்தர் நன்முத்துத் தண்டிகையைப்பெற்றுவப்பா
வின்பம் பெருகு தமிழிபலி - னன்பாவலால்
சீராரத்துறைசீர் செப்பினானல்லரங்கா
சாரியவனன்பிற்றழைந்து.

## தஞ்சாவூர் கோட்டை மஹாவித்துவான்
## மகா-ள-ஸ்ரீ கணபதியாப்பிள்ளை யவர்கள்
## இயற்றியது

எங்கு நிறைந்தசிவமின்னருளாற் பேருருவாத்
தங்கு மரத்துறைசீர் தாமிசைத்தான் - பொங்குதமிழ்
நல்லரங்காசாரியெனுநாமத்தோன் சோதிடத்தும்
வல்லோனாம் வாயன்பின் வாய்ந்து.

## சன்னாசிநல்லூர் வித்துவசிரோமணியாகிய
## மகா-ள-ள-ஸ்ரீ மே சண்முகப்படையாச்சியவர்களால்
## இயற்றப்பட்டது.

வலஞ்சுழிவிநாயகக்கடவுளை வாழ்த்தி
சலஞ்சூழ்புவியிற்சகலருமறிய
நிலந்தனிற்பரமனீடித்துறையு
நிலமாமதனை நேர்ந்திடவெனக்குத்
தென்புவியனைத்துந்தெளிந்தநந்தீச
முன்புளபுராணமொழிவழிகாட்டி
யின்பமாச்சொல்லெனவிறைஞ்சவான்மீக
னன்புடனந்தியகமகிழ்ந்துரைப்பா
னெல்லையிலீசனிருந்தலத்துயர்வை
நல்லதாச்சொல்வேனானறிந்தளவி
லம்புவியதனிலனந்தமாலயம்
பம்புறுமவற்றைப்பகருதற்கெளிதோ
சொல்லுதற்கவற்றைச்சோருவன்சேடன்
வல்லனோயானும்வாரிதிப்புவியிற்
றுல்லியமாகச்சொல்லொணாதாயினும்
வல்லுநர்வகுத்தவழிமுறைப்படியே
வேடனைவென்றவேடுவமுனிவரே
சொல்லுவலொன்றுசுருதிநூன்முறையின்
நல்லதென்றெவரும்நயப்புறும்பெரிய
பிரமகைவர்த்தப்பெருநூலதனுட்

சுரர்தமக்குரைத்தசொல்சிவத்தோத்திரத்
தறைவதுகேண்மதியறைவதுகேண்மதி
யெல்லைதீர்புகழ்பெறுமிசைமுதுகுன்றஞ்
சொல்லுமவ்வூர்க்குச்சுத்ததென்மேற்கு
நல்லதிருமுட்டநகர்க்குமேற்றிசை
வல்லநல்வசிட்டர்வாழ்த்துறைக்கீழ்பால்
நல்லூர்வில்வநதிக்குநேர்தெற்கு
நெல்வாயிலரத்துறைநீடுறுந்தலந்தான்
சொல்வார்நிவாநதிசுயம்பார்வடக்கிற்
பல்லாண்டாகப்பாரினன்றுறுமே
தெள்ளுவெள்ளாறுதீர்த்தமதாகு
முன்னிவந்துறுநர்க்குறுகதியளிக்கு
மறுகுதோலணிந்தவரத்துறைநாதரொ
டறிவுருவாம்பிகையானந்தநாயகி
பிரியமாயங்குப்பெயர்ந்திடாதுறைவ
ருரியவத்தலந்தானுணர்வுறப்பெரிதுந்
திருநெறித்தமிழெனுந்திருப்பெயர்புனைந்த
வரியசெய்மூவருமருளுதேவாரமும்
பெற்றதாலதனைச்சொற்றிடற்கெளிதோ
வாதிசங்கரர்தானருந்துதிசெய்தார்
காதலாற்றிருப்புகழ்கவிஞறேறுரைத்தார்
செப்பினார் குருநமசிவாயகுர்வரும்
ஒப்பில்வான்மிகியொளிர்தருமனந்தனுந்
திருத்தமாப்பூசைசெய்துமங்குற்றார்
பெருத்தநற்சேரசோழநற்பாண்டியர்
பேருடனாலயப்பதிட்டையுஞ்செய்தார்
சீர்பெறுந்தருமபுரமடத்தோருஞ்
செய்தனர்மடங்கள்சேராவடுதுறைச்
செய்தவத்தோருஞ்செய்தனர்மடங்க
ளிருக்குமேயிதற்குத்திருக்கில்போர்பத்தே
இத்துறைகிழக்கினேன்றவைம்முக்காற்
சித்தியையளிக்குந்திருக்கரந்துறையில்
வித்தகவகத்தியர்விதிப்படிபூசை
மெத்தவேசெய்துமேன்மையாயுற்றார்
சித்திராங்கதையினாற்சிதைவுறுகால்கை
சத்தியாயவளர்ந்ததுசாரங்கற்கே
யிங்கதின்மேற்கேயிசையுமைமுக்காற்
றங்குவதரத்துறைத்தலந்தானாகு
மரியநெல்வாயிலரத்துறையென்னாப்

பிரியமாய்முன்னர்ப்பேசியதிதுவே
இத்தலமதனி லிறந்தோர் பிறந்தோர்
பத்தியின் வாசஞ் செய்துளோர் பார்த்தோர்
சத்தியம் பட்சி சதிவிலங்கி யாவும்
மெத்தவுஞ் சாமுன் மேன்மையிற் கேட்டே டார்
நித்திய மோக்க நிலையுறப் பெறுவார்
நித்திலச் சிவிகை நிறைந்த பொற்சின்னம்
தத்தமாய்ப் பெற்றார் ஞானசம்பந்த
ரெழுவர் தாய்கலைமக ளிசைந்த தீமையைப்
பழுதெனத் தொலைத்தாள் பகர்கலியுகத்தே
யன்னமலர்ப் பொய்கை யவட்காயதுவே
பின்னமுநீல மலரெனும் பொய்கையில்
வன்னமா மாயன் மகிழ்தவஞ்செய்தான்
சொன்னநற்சேடனும் சொற்றவம்புரிந்தான்
நன்னயமாக நற்சனிசேயும்
தந்நோய்திரத்தவஞ்செய்திட்டார்
இறந்தோர்முத்தி யெய்தப்பிதிர்க்குப்
பிறந்துளதான்று பெருவடவாலே
மற்றிதன்மேற்கே மலருமைமுக்காற்
சொற்றனர்வசிட்டத் துறையெனமுன்னோர்
திகழுதென்மேற்கிற்றிரண்டவைம்முக்கால்
நிகழுநற்றலந்தானே ராடுதுறையாம்
செப்பினவதன்மேற் சேருமைமுக்காற்
றப்பிலாமான்துறை தானதுவாகும்
இத்தலவடமே லிசையுமைம் முக்கால்
அத்தலமிராகு வினாலந்துறையே
இங்கிதன்வடக்கே யிசைந்தவைமுக்கால்
தங்குவதாதி சத்திதன் றுறையே
இத்துறையேழினு மெழிலெழுமுனிவர்
சித்தமரய்ப்பூசை செய்துளாரதனான்
மெத்தவும்பெருமை மிகுத்துளவென்னாக்
சுத்தநற்புராணத் துத்தகவிரித்தே
யமிழ்தினையொத்த தமிழ்மொழியதனி
னித்தகவாகவியம்பினனாரெனி
னித்தியவாசநெல்வாயரத்துறை
தகவுறுவைணவ சமயத்தவனாப்
பகர்வுறுபாரத்துவாச கோத்திர
வரங்காசாரியபிதானப்
பெருந்தகையென்னும் பெருந்தவத்தோனே.

அகவல்முற்றிற்று.

